# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி :
71231

விவரங்களுக்கு:
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | ஜூலை—1982 | இதழ் 7

## பொருளடக்கம்


1. பிரார்த்தனை ... 209
2. ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு ... 210
3. விஜயதீபம் : இராமனைத் தரிசிப்போம்—சுவாமி கமலாத்மானந்தர் ... 213
4. தீட்சை வகைகள்—ராஜம் ஜயராமன் ... 217
5. சிறுவர் பகுதி : பகவான் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?—அ. வே. தனுஷ்கோடி ... 220
6. நான் பிரம்மமே—வி. ஆர். கணேசன் ... 222
7. துளசிதாசரின் உள்ளம்—எஸ். பி. ராஜகுமாரி ... 226
8. சுவாமி பிரேமானந்தர் ... 229
9. புறம் கூறுவது ஏன்?—கி. வா. ஜகந்நாதன் ... 232
10. ஆன்மிக உரையாடல்—சுவாமி சிவானந்தர் ... 234
11. அருள்நெறிக் கதை : செத்தால் பிழைக்கலாம் ... 236
12. இந்தியாவின் எதிர்காலம்—சுவாமி விவேகானந்தர் ... 239
13. பழிக்குப் பழி—மைதிலி வேணுகோபால் ... 243

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

தொகுதி 62 | துந்துபி ஞு ஆடி மீ | இதழ் 7


## பிரார்த்தனை

नमः श्रीशङ्कराचार्यगुरवे शङ्करात्मने ।
शरीरिणां शङ्कराय शङ्करज्ञानहेतवे ॥

நம: ஸ்ரீசங்கராசார்ய-குரவே சங்கராத்மநே ।
சரீரிணும் சங்கராய சங்கர-ஜ்ஞாநஹேதவே ॥

சிவபெருமானின் அவதாரமாகவும், பிறவியை அடைந்தோர்க்கு க்ஷேமத்தைக் கொடுப்பவராகவும், ஆத்மவித்யையை உபதேசித்தவராகவும் உள்ள ஆதிசங்கராகிய குருவிற்கு நமஸ்காரம்.

உற்றதுணை நீயல்லாற் பற்று வேறென்று
உன்னேன்; பன் ஞள்உலகத் தோடியாடிக்
கற்றதும்கேட் டதுமிதனுக் கேது வாகும்;
கற்பதும்கேட் டதுமமையும்; காணு நீத
நற்றுணையே! அருள்தாயே! இன்ப மான
நாதாந்தப் பரம்பொருளே! நார ஞதி
சுற்றமுமாய், நல்லன்பர் தமைச்சே யாகக்
தொழும்புகொள்ளும் சுஞகனமே! சோதிக் குன்றே!

—தாயுமானவர்.



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, செப்டம்பர் 21, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையிலிருந்து வெளியே வந்தார். அவர் ம-வுடன் பேசிக் கொண்டே சவுக்குத் தோப்புப் பக்கமாகப் போனார். ஒரு பக்தர் துண்டையும் ஒரு செம்பில் தண்ணீரையும் எடுத்துக்கொண்டு அவர்களைத் தொடர்ந்து சென்றார். அன்றையதினம் குரு தேவர் கல்கத்தாவில் சைதன்யலீலை என்ற நாடகம் பார்ப்பதற்குச் செல்வதாக இருந்தார். எனவே அது பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பஞ்சவடியின் அருகில் ம-வைப் பார்த்து): அதிகக் கட்டணம் செலுத்தி விசேஷ ஆசனத்தில் அமர வேண்டும் என்று ராம் சொல்வதெல்லாம் ரஜோகுணம் நிறைந்த மக்களுக்குத்தான் பொருந்தும். அவ்வளவு அதிகமாகப் பணம் கொடுத்து விசேஷ வகுப்பில் உட்கார வேண்டும் என்று என்ன அவசியம் இருக்கிறது? அதிகக் கட்டணம் செலுத்த வேண்டிய உயர்வகுப்பு ஆசனம் நமக்குத் தேவையில்லை.

* * *

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் மகேந்திர முகர்ஜி என்பவரின் வண்டியில் ஏறிக்கொண்டு தட்சிணேசுவரத்திலிருந்து கல்கத்தாவிற்கு வந்து கொண்டிருந்தார். ஞாயிற்றுக்கிழமையான அன்றையதினம் மாலை சுமார் ஐந்து மணி இருக்கும். வண்டியில் குருதேவருடன் மகேந்திர முகர்ஜி, ம-, ஒரு பக்தர் ஆகியோரும் உடன் இருந்தனர். வண்டி சிறிது தூரம் சென்றதுமே குருதேவர் பகவத் சிந்தனையில் ஈடுபட்டுச் சமாதி நிலையில் ஆழ்ந்துவிட்டார்.

மிகவும் நீண்டநேரம் கழிந்தபிறகுதான் பரம ஹம்சதேவருக்குப் புறவுலக நினைவு திரும்பியது. ''அந்தப் பயல் ஹாஸ்ரா எனக்கு வந்து பாடம் போதிக்கிறான், பயட்ட கெல்!'' என்றார் குரு தேவர். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர், ''நான் தண்ணீர் குடிப்பேன்'' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். இவ்விதம் சமாதி நிலையில் ஆழ்ந்திருந்த தமது மனதைப் புறவுலகத்தின் நினைவுக்குக் கொண்டு வரும் பொருட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

மகேந்திர முகர்ஜி (ம-விடம்): குருதேவருக்கு நான் ஏதாவது சிறிது பக்ஷணம் வாங்கி வரட்டுமா?

ம-: வேண்டாம். அவர் இப்போது ஒன்றும் சாப்பிடமாட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்த நிலையில்): நான் சாப்பிடுவேன், வெளியே போவேன்.

மகேந்திர முகர்ஜிக்கு ஹாதீபாகான் என்ற இடத்தில் மாவு அரைக்கும் ஓர் ஆலை இருந்தது. அந்த ஆலைக்கு அவர் குருதேவரை அழைத்துச் சென்றார். அந்த இடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரை ஓய்வு கொள்ளும்படி செய்துவிட்டுப் பிறகு ஸ்டார் தியேட்டருக்கு அவரை அழைத்துச் செல்வ தென்று ஏற்பாடாகி யிருந்தது. அதன்படி மகேந்திர முகர்ஜி ஸ்ரீராமகிருஷ்ணரை அங்கே சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ளும்படி வேண்டினார். மகேந்திர முகர்ஜியின் வீடு பாக்பஜார் பகுதியில் இருந்த மதனமோகனருடைய ஆலயத்திற்குச் சிறிது வடக்கில் இருந்தது. மகேந்திரரின் தந்தைக்குப் பரமஹம்சரைப்பற்றித் தெரியாது. வேற்றூர் என்ற எண்ணத்தில் தந்தை ஸ்ரீராம கிருஷ்ணரைப் புறக்கணிக்கக்கூடும்; அதுபோல ஒரு சங்கடமான நிலை ஏற்படக் கூடாது என்பது மகேந்திர முகர்ஜியின் கருத்து. ஆகவேதான் மகேந்திர முகர்ஜி குருதேவரைத் தமது வீட்டிற்கு அழைத்துச் செல்லவில்லை. மகேந்திரரின் இரண்டாவது சகோதரரான பிரியநாத் என்பவரும் குருதேவரின் பக்தராக இருந்தார்.

மகேந்திரரின் மாவு ஆலேயில் இருந்த ஒரு கட்டிலின்மீது ஜமக்காளம் விரித்திருந்தது. அதன்மீது அமர்ந்து குருதேவர் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வையும் மகேந்திர முகர்ஜியையும் பார்த்து): ஹாஸ்ரா ஒரு சமயம் *ஸ்ரீசைதன்ய சரிதாமிருதம் புத்தகத்தைப் படிக்கக் கேட்டுவிட்டு, 'இதெல்லாம் சக்தியின் லீலே; சர்வ வியாபியான விபுவின் (பிரம்மத் தின்) லீலே இல்லே' என்று கூறினன். பிரம்மத்துக்குப் புறம்பாகச் சக்தி இருப்பது சாத்தியமாகுமா? பிரம்மமும் சக்தியும் ஒன்றே என்ற இந்த இடத்தினுடைய (ஸ்ரீராமகிருஷ்ண ருடைய என்பது பொருள்) கொள்கையைக் கவிழ்த்துவிட வேண்டும், நிராகரித்து அடித்துப் போடவேண்டும் என்பதற்காக ஹாஸ்ரா செய்யும் சேஷ்டைதான் இந்த வேலே! பிரம்மமும் சக்தியும் ஒன்றே (அபேதமானவை) என்பதை நான் அநு பூதியில் அறிந்திருக்கிறேன். தண்ணீரும் அதன் நனேக்கும் தன்மையும் ஒன்றே. நெருப்பும் அதன் சுடும் தன்மையும் ஒன்றே. அது போலவே பிரம்மமும் சக்தியும் ஒன்றேயாகும். எல்லோ ருடைய உள்ளத்திலும் எங்கும் நிறைந்த பொருளாக (விபு ரூபத்தில்) பிரம்மம் வியாபித் திருக்கிறது. பிரம்மத்தின் சாந்நித்தியம் (பிரகாசம்) சிலரது உள்ளத்தில் அதிக அளவிலும், மற்றும் சிலரது உள்ளத்தில் குறைந்த அளவிலும் காணப்படுகிறது. ஹாஸ்ரா மேலும் இன்னென் றையும் சொல்கிருன்: 'பகவானேச் சாட்சாத் கரிக்கும் பக்தன் பகவானேப் போலவே ஆறு ஐசுவரியங்களேயும் பேராற்றல்களேயும் கொண்ட வனுக ஆகிவிடுகிருன்; அவன் அவற்றைப் பயன்படுத்திலுைம் சரி, பயன்படுத்தாவிட்டாலும் சரி, அந்த ஆறு ஐசுவரியங்களும் பேராற்றல் களும் அந்தப் பக்தனிடம் இருந்துதான் தீரும்' என்று ஹாஸ்ரா சாதிக்கிருன்.

ம-: ஆறு ஐசுவரியங்களும் அந்தப் பக்தன் கையில் இருந்தே தீர வேண்டும்! (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ஆம், ஆம், அந்தப் பக்தனிடம் இருந்துதான் ஆக வேண்டுமாம்! என்ன அல்பபுத்தி! அதிகாரத் தையோ செல்வத்தையோ அனுபவிக்காத ஒரு வன் அவற்றைப் பெறுவதற்குப் படாத பாடுபடு கிருன். எவன் ஒருவன் ஒருபோதுமே ஐசுவரி யத்தை அனுபவித்ததில்லேயோ, அவன்தான் 'ஐசுவரியம், ஐசுவரியம்' என்று ஜபம் செய்தபடி சஞ்சலப்படுகிருன். ஆனுல், சுத்த பக்தி கொண்ட உண்மையான பக்தனே, தனக்கு ஐசுவரியம் வாய்க்க வேண்டும் என்று ஒருபோதும் பிரார்த் தனே செய்யமாட்டான்.

குருதேவர் முகம் கழுவிக்கொண்டார். அடுத்து அவர் புகை குடிப்பதற்கு அன்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். குருதேவர் அப்போது ம-விடம், "சந்தியாவேளே வந்து விட்டதோ? அப்படி வந்திருந்தால் நான் புகைகுடிக்க மாட்டேன். சந்திநேரம் வந்தவுடன் ஒருவன் மற்ற எல்லா வேலேகளேயும் ஒதுக்கி வைத்துவிட்டுக் கடவுள் சிந்தனேயில் ஈடுபட வேண்டும்" என்று கூறினுர்.

இவ்விதம் சொல்லிவிட்டு, குருதேவர் தமது கையின் மீதிருந்த உரோமங்களே உற்று நோக்கினுர். அந்த உரோமங்களே எண்ணிப் பார்க்க முடியுமா முடியாதா என்று அவர் கவனித்தார். உரோமங்களே எண்ண முடியாமற் போனுல் அது சந்தியாவேளே வந்திருப்பதற்கு உரிய அறிகுறியாகும்.

குருதேவர் ஏறி வந்த வண்டி, கல்கத்தாவில் பீடன் வீதியில் இருந்த ஸ்டார் (நட்சத்திர) நாடகக் கொட்டகை முன்பு வந்து சேர்ந்தது. அப்போது சுமார் எட்டரை மணி இருக்கும். குருதேவருடன் ம-, பாபுராம், மகேந்திர முகர்ஜி ஆகியோர் உட்பட மற்றும் இரண்டொரு பக்தர் களும் வந்திருந்தனர். எவ்வளவு பணம் செலுத்தி எத்தகைய வகுப்புக்களுக்கு டிக்கட் வாங்குவது என்பதைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந் தனர். அதே சமயம், பிரபல நாடகாசிரியரும் ஸ்டார் தியேட்டரின் நிர்வாகியுமான கிரீஷ்சந்திர கோஷ் தம்மைச் சேர்ந்த சில பிரமுகர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணரை வரவேற்கத் தாமே நேரில் வந்தார். அவர் குருதேவர் ஏறி வந்த வண்டியின்

* கிருஷ்ண சைதன்யரின் வாழ்க்கை வரலாற் றைக் கூறும் ஆதாரபூர்வமான நூல் ஸ்ரீசைதன்ய சரிதாமிருதம். அந்த நூலில் உள்ள சைதன் யரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முழுவதும் சக்தியின் திருவிளேயாடலே தவிர, அவற்றுக்கும் எங்கும் நிறைந்த பிரம்மத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது என்பது ஹாஸ்ராவின் கருத்து.

அருகே வந்து பரமஹம்சரை வணங்கினர். பிறகு கிரீஷ் மிகுந்த மரியாதையுடன் ஸ்ரீராம கிருஷ்ணரை மாடிக்கு அழைத்துச் சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி ஏற்கனவே கிரீஷ் கோஷ் கேள்வியுற்றிருந்தார். அத்தகைய பரம ஹம்சர் தாமே சைதன்யலீலை நாடகம் பார்க்க வந்ததைக் குறித்து, கிரீஷ் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தார். கொட்டகையின் தென்மேற்குப் பகுதியில் இருந்த பெட்டி என்று அழைக்கப்படும் தனியான ஓர் இருப்பிடம் குருதேவருக்கு அளிக்கப்பட்டது. குருதேவருக்கு அருகில் ம- அமர்ந்தார். அவருக்குப் பின்புறத்தில் பாபு ராமும் மற்றும் சில பக்தர்களும் அமர்ந்து கொண்டனர். நாடகக் கொட்டகை ஒளிமய மாகத் திகழ்ந்தது. பிரகாசம் நிறைந்த பல விளக்குகள் அங்கே கவர்ச்சிகரமாக அமைக்கப் பட்டிருந்தன.

குருதேவர் தமது இருப்பிடத்திலிருந்து கீழ் நோக்கிப் பார்த்தார். அங்கே கொட்டகையின் கீழ்ப் பகுதியில் நாடகம் பார்க்க வந்திருந்த மக்கள் பெருங்கூட்டமாகக் குழுமியிருந்ததைக் கவனித்தார். குருதேவருக்கு இடப் பக்கத்தில் நாடகக் குழுவினர் காணப்பட்டனர். விசேஷப் பெட்டிகள் என்று சொல்லப்படும் தனி இடங் களிலும் ஏராளமான மக்கள் அமர்ந்திருந்தனர். ஒவ்வொரு பெட்டியின் பின்புறத்திலும் கொட்ட கையின் வேலையாள் ஒருவன் நியமிக்கப்பட்டிருந் தான். அந்த வேலையாள் ஒவ்வொருவனும் பெட்டியின் பின்புறமாக நின்றுகொண்டு, பெட்டியில் இருந்தவர்களுக்கு விசிறிக்கொண் டிருந்தான். குருதேவருக்கு விசிறும்படி கிரீஷ் ஓர் ஆளை ஏற்பாடு செய்துவிட்டு அங்கிருந்து சென்றார்.

நாடகக் கொட்டகையைப் பார்த்து, குரு தேவர், ஒரு சிறிய பையனைப் போல மகிழ்ச்சி யுடன் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்துப் புன் சிரிப்புடன்): ஆகா! இந்த இடம் மிகவும் அழகாக இருக்கிறது! இந்த நாடகத்தை நான் பார்க்க வந்தது மிகவும் நல்லதாயிற்று. மக்கள் பெருந்திரளாகக் கூடியிருப்பது என்னைப் பரவசப் படுத்துகிறது. அப்போது, கடவுள் தாமே இத்தனை வடிவங்களிலும் திகழ்கிறார் என்பதை மிகவும் தெளிவாக நான் பார்க்கிறேன்.

ம-: ஆம், அது உண்மைதான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: இந்த வகுப்பில் நாம் உட்கார்ந்திருப்பதற்கு எவ்வளவு கட்டணம் செலுத்த வேண்டும்?

ம-: ஒரு கட்டணமும் கிடையாது. அவர்கள் தங்களிடமிருந்து கட்டணம் எதையும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். தாங்கள் இந்த நாடகம் பார்க்க வந்திருக்கிறீர்கள் என்பது குறித்து அவர்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்திருக்கின் றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: எல்லாம் ஜகன்மாதாவின் மகிமை. அவளது கிருபையால்தான் இத்தகைய நிகழ்ச்சிகள் நேருகின்றன.

சிறிது நேரத்தில் நாடகம் ஆரம்பமாயிற்று. நாடகத்தில் சைதன்யரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் மிகவும் உருக்கமாக அமைந்திருந்தன. அவற் றைக் கண்ட குருதேவர் பரவசம் பொங்க அவ்வப்போது, 'ஆகா!' என்றார்.

சிறிது நேரத்தில் குருதேவரால் தமது தெய்விகப் பரவசநிலையைக் கட்டுப்படுத்த இயல வில்லை. 'ஆகா!' என்று சொல்லிக்கொண்டே ம- இருந்த பக்கம் திரும்பினர். அவரது கண்களிலிருந்து பிரேமைக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாபுராம், ம-ஆகியோரிடம்): இதோ பாருங்கள்! எனக்குத் தெய்விகப் பரவசம் ஏற்பட்டுச் சமாதிநிலையில் நான் ஆழ்ந்துவிட்டால் அதைக் குறித்து நீங்கள் தடபுடல் ஒன்றும் செய்யாதீர்கள். ஏனென்றால் நீங்கள் பரபரப்போ ஆரவாரமோ செய்வதை இங்குள்ள பொது மக்கள் கவனிக்க நேர்ந்தால் என்னை அவர்கள் வெறும் வேஷம் போடுகிறவன் என்று நினைப் பார்கள்.

நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த குரு தேவர் ம-வின் பக்கம் திரும்பி ஏதோ சொல்ல முயன்றார். ஆனால் பக்தி உணர்ச்சியினால் அவரால் பேச முடியவில்லை. அவரது குரல் தழுதழுத்துவிட்டது. அவரது கண்களிலிருந்து கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது.

நாடகத்தின் காட்சி குருதேவரிடம் ஆன்மிக எழுச்சிகளைத் தோற்றுவித்தது. அவர் தெய்விக நிலையில் ஆழ்ந்து லயித்துவிட்டார். ●




# இராமனைத் தரிசிப்போம்

சுவாமி கமலாத்மானந்தர்

கம்ப ராமாயணத்தில் கம்பர் முதலில் இராமனை ஒரு மனிதனைக் காட்டுகிறார்; இரண்டாவதாக ஓர் இலட்சிய மனிதனைக் காட்டுகிறார்; முடிவில் இராமன் பரம்பொருளே என்ற கருத்தை நிலை நாட்டிவிடுகிறார்.

வால்மீகி ராமாயணத்தில் இராமன் மனிதன் என்ற கருத்தும் தெய்வம் என்ற கருத்தும் சேர்ந்தே செல்கின்றன.

துளசிதாசர் தமது ராமாயணத்தின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையிலும் ஸ்ரீராமனைத் தெய்வமாகவே காட்டுகிறார்.

## இராமன் பிறப்பு

வசுதேவரும் தேவகியும் கம்சனால் மதுரையில் சிறை வைக்கப்பட்டிருந்தனர். நள்ளிரவில் கண்ணன் சிறையில் அவதரித்தான். அப்போது அவன் தன் பெற்றோர்களுக்குச் சங்கு சக்கரங்களோடு மகாவிஷ்ணுவாகக் காட்சி தந்தான். இந்த வரலாறு கிருஷ்ணாவதாரத்தில் இடம் பெற்றிருப்பதை அனைவரும் அறிவர்.

இதே போன்ற வரலாறு அத்யாத்ம ராமாயணத்திலும் துளசி ராமாயணத்திலும் இராமன் பிறப்பின்போது இடம் பெற்றுள்ளது.

## அத்யாத்ம ராமாயணத்தில்

ஸ்ரீராமன் பிறந்தவுடனேயே நான்கு கைகளுடன் சங்கு சக்கரங்களை ஏந்திய மகா விஷ்ணுவாகக் கௌசல்யைக்குத் தரிசனம் கொடுத்தான். அப்போது, கோசலை பின்வருமாறு திருமாலைத் துதித்தாள்:—

''ஹே தேவதேவனே! சங்கு சக்கர கதாதரனே! உனக்கு நமஸ்காரம். பரிபூரண சொரூபியும், பரமாத்மாவும், எல்லையற்றவனும், புருஷோத்தமனும், அச்சுதனும் ஆகிய உனக்கு நமஸ்காரம்.

''இறைவா! நீ ஞானசொரூபி, மனதுக்கும் வாக்குக்கும் புலனாகாதவன், சத்பொருளாக விளங்குபவன் என்று வேதத்தை அறிந்த பெரியோர் கூறுகிறார்கள்.

''நீ உனது மாயாசக்தியினால் முக்குணங்களுடன் கூடினவனாக இருந்து, இந்த உலகைப் படைத்துக் காத்து, அழிக்கவும் செய்கிறாய். உண்மையில் நீ எப்பொழுதும் முக்குணங்களையும் கடந்த, துரீயமான, நிர்மல ஸ்வரூபியாகவே விளங்குகிறாய் அல்லவா?

''ஹே பிரபுவே! உனது இந்தத் தெய்விக வடிவம் என் உள்ளத்தில் எப்போதும் நிலைத்து நிற்கட்டும். பிரபஞ்சம் முழுவதையும் மோகிக்கச் செய்யும், புவனமோகினியாகிய உனது மாயை என்னைச் சூழாமல் இருக்கட்டும்.

''ஹே விச்வரூபியே! இந்தத் தெய்விக மங்கள வடிவத்தை மறைத்துக்கொள். மகிழ்ச்சியைத் தர வல்ல குழந்தை வடிவத்தில் எனக்குத் தரிசனம் தந்தருள்வாய். அப்போதுதான் உன்னை நான் அரவணைத்துக் கொஞ்சி விளையாட முடியும்''* என்று துதித்தாள்.

திருமால் அவளிடம், ''நீ உனது முற்பிறவியில் என்னைப் புதல்வனாகப் பெறவேண்டும் என்று என்னை வழிபட்டாய். அதற்கு

* சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடம் வெளியீடு.

இணங்கவே நான் இப்போது உன் மகனாகப் பிறந்திருக்கிறேன். பூர்வ புண்ணியம் காரணமாகவே எனது தெய்விகம் வாய்ந்த இந்தத் தரிசனம் உனக்குக் கிடைத்தது. உனது விருப்பம் போலவே குழந்தை வடிவம் எடுத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே சாதாரணக் குழந்தையாகி அழ ஆரம்பித்தார்.

### துளசி ராமாயணத்தில்

துளசி ராமாயணத்தின் பல பகுதிகள் அத்யாத்ம ராமாயணத்தை நினைவுபடுத்தும் வகையில் அமைந்துள்ளன. அவற்றில் ஒரு பகுதி கீழே தரப்பெறுகிறது:—

ஸ்ரீராமன் பிறந்தபோது தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். தேவதுந்துபிகள் முழங்கின.

குழந்தை, யோகியர் உள்ளங்களையும் கவர்ந்திழுக்கும் வகையில் பேரழகுடன் திகழ்ந்தது. குழந்தையின் அழகு கௌசல்யையின் உள்ளத்தைப் பரவசப்படுத்தியது.

சங்கு சக்கர கதாதாரியாக நான்கு கைகளோடும் மார்பில் வனமாலையையும் தெய்விக ஆபரணங்களையும் அணிந்த மகாவிஷ்ணுவாக ஸ்ரீராமன் பிறந்தவுடனே தன் தாய் கௌசல்யைக்குத் தரிசனம் கொடுத்தான்.

வேதநாயகனின் திவ்ய தரிசனம் பெற்ற கௌசல்யை இரண்டு கரங்களையும் கூப்பித் தழுதழுத்த குரலில் பின்வருமாறு துதித்தாள்:—

''ஹே எல்லையற்ற பகவானே! உன்னை நான் எவ்வாறு ஸ்துதி செய்யட்டும்? மாயைக்கும் முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்றும், உனது சொரூபம் எல்லையற்றது என்றும் வேதங்களும் புராணங்களும் உன்னைப் புகழ்ந்து பாடுகின்றன.

''இன்பக் களஞ்சியம், கருணைக் கடல், குணக் குன்று என்றெல்லாம் வேத சாஸ்திரங்களும் ஆன்றோரும் உன்னைத் துதித்துப் போற்றுகின்றனர்.

''பக்தர்களின் பேரன்புக்கு உரியவனான நாராயணன் எனக்கு நன்மை செய்யும்பொருட்டு இங்கே தோன்றியிருக்கிறான். ஆச்சரியம்! ஆச்சரியம்!

''எல்லையற்ற பிரம்மாண்டமான உலகங்களை மாயையினால் தோற்றுவித்து அவற்றைத் தன் உரோமக்கால்களில் தாங்கியிருப்பவன் என்று உன்னைப்பற்றிச் சுருதிகள் முழங்குகின்றன. பிரம்மாண்டங்களை எல்லாம் உன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் நீ என் வயிற்றில் இருந்தாய் என்பது பெரிதும் வியப்புக்கு உரியதாக இருக்கிறது! இதை யார்தாம் நம்புவார்கள்?'' என்று கௌசல்யை பிரார்த்தித்தாள்.

அப்போது மகாவிஷ்ணு புன்சிரிப்புடன் கௌசல்யையின் முற்பிறவிகளைப் பற்றிய வரலாறுகளைக் கௌசல்யைக்கு எடுத்துக் கூறினார்.



கௌசல்யை, ''இறைவா! இந்தத் தெய்விக வடிவம் விட்டுக் குழந்தை வடிவத்தில் எனக்கும் மற்றவர்களுக்கும் மகிழ்ச்சியைத் தருவாயாக'' என்றாள்.

அன்னையின் பிரார்த்தனைக்கு இணங்க மகாவிஷ்ணு சாதாரணக் குழந்தையாக மாறி அழ ஆரம்பித்தார்.

பகவானின் மாயை காரணமாக அந்தக் குழந்தை தன்னுடையதே என்ற வாத்சல்யம் கோசலைக்கு ஏற்பட்டது.

ஸ்ரீராமர் பிறந்ததையொட்டி அயோத்தி மாநகரமே விழாக்கோலம் பூண்டு கோலாகலமாக விளங்கிற்று. அந்தக் கோலாகலம் ஆதிசேஷனாலும் கலைமகளாலும்கூட விளக்க இயலாததாக இருந்தது.

அன்றையதினம் உதித்த சூரியன், ஆகாயத்தில் தனது சஞ்சாரத்தை நிறுத்திவிட்டு,

முழுக்க முழுக்க சர்க்கரையாக இருந்து விடாதே! உலகம் உன்னை விழுங்கிவிடும். முழுக்க முழுக்க எட்டிக்காயாக இருந்து விடாதே! உலகம் உன்னை உமிழ்ந்துவிடும்.

—பாரசீகப் பழமொழி

அயோத்தி மக்களின் கோலாகலத்தைப் பார்த்துக் கொண்டு அப்படியே நின்றுவிட்டான். சூரிய பகவான் தன்னை மறந்து தன் தேரில் நின்று விட்டதனால் இரவு நெருங்கவில்லை. சூரியன் ஒரு மாதம் வரையிலும் ஆகாயத்தில் மெய்ம்மறந்து தான் நின்ற இடத்திலேயே நின்றிருந்தான். ஒரு மாதம் கழிந்தபிறகு சூரியன் தன் நிலையை உணர்ந்து ஸ்ரீராமனின் புகழைப் பாடிக் கொண்டே தன் சஞ்சாரத்தை மேற்கொண்டு தொடர்ந்தான். ஸ்ரீராமன் பிறந்த மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்திருந்த மக்கள் ஒரு மாத காலம் ஒரு நாளாகச் சூரியனின் சஞ்சாரம் தடைப்பட்டதனால் கழிந்ததை உணரவும் இல்லை.

### துளசி ராமாயணத்தில் மற்றொரு நிகழ்ச்சி

கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனின் மண்ணுண்ட வாயில் பிரபஞ்சம் முழுவதும் அடங்கியிருந்த விச்வரூபக் காட்சியை யசோதை கண்டாள்.

அர்ஜுனனுக்குப் பகவான் தனது விச்வரூப தரிசனம் அருளியதைக் கீதையில் நாம் படிக்கிறோம்.

இந்த இரண்டு விச்வரூப தரிசனங்களையும் நினைவுபடுத்துவது போல் துளசிதாசரும் ஒரு நிகழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறார். அந்த நிகழ்ச்சி வருமாறு:—

ஒரு நாள் காலைநேரம். கௌசல்யை வழக்கம் போல் குழந்தை இராமனைக் குளிப்பாட்டினாள். அடுத்து அவள் குழந்தைக்கு ஆடையணிகள் அணிவித்து அழகுபடுத்தினாள்.

குழந்தை தூங்க வேண்டிய நேரம் நெருங்கியது. இராமனைத் தொட்டிலில் இட்டுக் கோசலை தாலாட்டுப் பாடினாள். சிறிது நேரத்தில் குழந்தையும் உறங்கினான்.

இராமன் தூங்கிய பிறகு கோசலை நீராடினாள். அவள் தன் இஷ்ட தெய்வமான ஸ்ரீமந் நாராயணனை நாள்தோறும் பூஜிப்பது வழக்கம். நீராடிய பிறகு கௌசல்யா தேவி பூஜையறைக்குச் சென்று ஸ்ரீமந்நாராயணனைப் பூஜித்தாள். பகவானுக்கு நைவேத்தியம் படைக்கும் நேரம் நெருங்கியது. கோசலை பூஜையறையிலிருந்து சமையலறைக்குச் சென்று நைவேத்தியம் எடுத்து வந்தாள். ஸ்ரீமந்நாராயணனுக்குப் பக்திபூர்வமாக நிவேதனம் சமர்ப்பித்துவிட்டுப் பூஜையறையிலிருந்து வெளியே வந்தாள்.

மீண்டும் பூஜையறைக்குச் சென்றபோது, அங்கே ஒரு காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. குழந்தையான இராமன், கௌசல்யை பகவானுக்கு வைத்துச் சென்ற நிவேதனத்தைச் சாப்பிட்டுக்கொண்டிருந்ததுதான் அந்தக் காட்சி. தன் குழந்தையை அந்த நிலையில் கண்டு, கோசலை மிகவும் பயந்துவிட்டாள்.

தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்த குழந்தை இங்கே எப்படி வந்தது? அவளுக்கு ஒன்றும் புரியவில்லை, குழம்பினாள்.

மனக் கலக்கத்துடன், குழந்தையைத் தான் தூங்க வைத்திருந்த கட்டிலை நோக்கி ஓடினாள். அங்கே குழந்தை தான் விட்டுச் சென்ற நிலையிலேயே ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்ததைக் கண்டாள்.

திரும்பவும் பூஜையறைக்கு ஓடிச் சென்று பார்த்தாள். அங்கேயும் தன் குழந்தையை நிவேதனத்தை உட்கொள்ளும் நிலையில் கண்டாள்.

இவ்விதம் தன் குழந்தையை இரண்டு இடங்களிலும் ஒரே சமயத்தில் பார்த்ததனால் கோசலை மிகவும் பயந்துபோய்விட்டாள்.

'குழந்தை இரண்டு இடங்களில் எப்படி ஒரே சமயத்தில் இருக்க முடியும்? எனக்குச் சித்தப் பிரமை ஏற்பட்டுவிட்டதா? அல்லது இந்த நிகழ்ச்சிக்கு விசேஷ காரணம் ஏதாவது இருக்குமா?' என்று நினைத்துக் கோசலை குழம்பினாள்.

பயம் காரணமாகக் கோசலையின் உடல் வேர்த்துக் கொட்டியது. அவளது அச்சத்தைப்

புரிந்துகொண்ட குழந்தை இராமன் புன்னகை பூத்தான். மறுவிநாடி அவன் தனது விச்வரூப தரிசனத்தைக் கோசலைக்குக் காட்டி அருளினான்.

கோடானுகோடி உலகங்களும் ஜீவர்களும் ஸ்ரீராமனுக்குள் அடங்கியிருக்கும் தெய்விக மயமான விச்வரூபக் காட்சி கோசலைக்குக் கிட்டிற்று.

எண்ணற்ற சூரிய சந்திரர்களும், தேவர்களும் முனிவர்களும், ஆறுகளும் மலைகளும் காடு களும் ஜீவர்களும் ஸ்ரீராமனின் விசுவரூபத்தில் அடங்கியிருந்தனர்.

புவனத்தை மயக்க வல்ல மாயை, சாட்சாத் சர்வேச்வரனை ஸ்ரீராமனின் அடிமையாகக் கைகட்டி அவனது கட்டளையை எதிர்பார்த்து நிற்பதையும் கோசலை கண்டாள்.

இது போன்று தான் ஒருபோதும் கண்டும் கேட்டும் இராத எண்ணற்ற புதுமைகள் நிறைந்த தாக ஸ்ரீராமபிரானின் பிரம்மாண்டமான வடிவம் விளங்குவதைக் கண்டாள்.

ஸ்ரீராமன் அருளிய விச்வரூபக் காட்சியைக் கண்டு கோசலை பரவசம் அடைந்தாள். அவளுக் குப் பேசவும் வாய் வரவில்லை. எனவே, விச்வரூபக் காட்சியைக் கண்டு அவள் துதிக்கவு மில்லை. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக இராமனின் பாதங்களில் அவள் வீழ்ந்து வணங்கினாள்.

ஸ்ரீராமனும் தனது விச்வரூபக் காட்சியை மறைத்துக்கொண்டு பழையபடி கோசலையின் புதல்வனாக வடிவம் கொண்டான்.

முடிவில், 'பரம்பொருளை என் குழந்தை என்று அல்லவா நான் சர்வசாதாரணமாக நினைத்து விட்டேன்!' என்ற ஒருவிதப் பயமே விச்வரூபத் தைக் கண்ட கோசலையை ஆட்கொண்டது.

கோசலையின் பயத்தை நீக்கி இராமன், ''தாயே! இங்கு நடந்தவற்றை நீ எவரிடமும் தெரிவிக்க வேண்டாம்'' என்று கூறினான்.

அப்போது கோசலை, ''பகவானே! தாங்கள் மாயையை என்மீது செலுத்தி என்னை அஞ்ஞானத்தில் ஆழ்த்தாதீர்கள்'' என்று மீண்டும் மீண்டும் ஸ்ரீராமனிடம் பிரார்த்தித்துக் கொண்டாள்.

பிறகு தெய்விக மாயைக்கு ஆட்பட்ட நிலையில் கோசலை ஸ்ரீராமனின் பரத்துவத்தை மறந்து, அந்தத் திவ்யக் குழந்தையைத் தன் குழந்தை என்றே வளர்த்து வரலானாள்.

* * *

கௌசல்யையின் தவம் பலித்துவிட்டதை, அவளது பூஜையைப் பகவான் அங்கீகரித்து ஏற்றுக்கொண்டதை மேற்கண்ட ஸ்ரீராமனின் திருவிளையாடலில் காட்டுகிறார் கோசுவாமி துளசிதாசர்.

துளசி ராமாயணத்தில் மட்டும் காணப்படும் இந்த நிகழ்ச்சி, பிற ராமாயணங்களில் எதிலும் இடம் பெறாத நிகழ்ச்சி ஆகும்.

வால்மீகியின் மறு அவதாரம் என்று துளசி தாசர் கருதப்படுகிறார். மேலே நாம் பார்த்ததைப் போன்று வால்மீகி ராமாயணம் எழுதும் போது விடுபட்டுப் போன நிகழ்ச்சிகளைச் சொல் வதற்காகத்தான் வால்மீகி மகரிஷி துளசி தாசராகப் பிறந்தாரோ!

## தியாகராஜர் வாக்கு



மாந்தரே! நீங்கள் அனைவரும் சிவ, சிவ, சிவ என்று ஜபம் செய்து உலக வாழ்க்கையின் தொல்லைகளைப் போக்கிக்கொள்ளக் கூடாதா?

காமம் முதலியவற்றை அடியுடன் அறுத்து, பர ஸ்திரீகளையும் பிறர் பொருளை யும் விரும்புவதை வெறுத்து, மூடத்தனத்தை ஒழித்து, அதிநியமத்துடன் வில்வதளம் கொண்டு அர்ச்சனை செய்து சிவ, சிவ, சிவ எனலாகாதா?

நல்லோரை அடுத்து, அவர்களே தெய்வங்கள் என்று மனதில் கருதி, வெட்கம் முதலியவற்றை அகற்றி, இதயத் தாமரையில் சிவனைப் பூசித்து, நாமஸ்மரணை செய்யலாகாதா?

வேதங்கள் ஓதிப் பரம்பொருளைத் துதித்து, பயனற்ற பேச்சுக்களை விலக்கி, இந்தத் தியாகராஜன் வணங்கும் தெய்வம் அவனே என்று கருதி சிவ, சிவ, சிவ என்று துதிக்கலாகாதா?

# தீட்சை வகைகள்

ராஜம் ஜயராமன்

ஆன்மாவானது தத்துவக் கூட்டங்களில் கட்டுண்டு, தேகம், இந்திரியம், கரணம் முதலிய வற்றையே தான் என்று கருதி, ஐம்பொறிகளோடு கூடி மயங்கித் தன்னை அறியமுடியாத நிலையில் இருக்கிறது. காரணம், ஆன்மா மும்மலங்களால் மறைப்புண்டு கிடப்பதுதான். இந்திரியங்கள் மூலமாக ஏற்படும் மகிழ்ச்சியில் பற்றுக் கொண்டு பிறவித் தளையில் கட்டுண்டு அல்லற்படுகிறது.

இந்த உலக வாழ்க்கை அனைத்துமே அநித்தியம் என்ற தெளிவைப் பெற்று, அதை ஒதுக்கி, 'திருவருளைப் பெற வேண்டும்' என்ற மெய்ஞ் ஞானம் உயிர்களுக்கு வர வேண்டும். மலநீக்கம் ஏற்பட்டால்தான் உண்மைஞானத்தைப் பெற முடியும். உயிர்களுக்குப் பாசநீக்கமும், மெய்ஞ் ஞானமும் ஏற்பட வேண்டுமானால் அதற்குக் குருவின் திருவருள் வேண்டும். தோணியின் உதவிகொண்டு கடலைக் கடப்பது போல, குருவின் அருளால் ஞானம் பெற்றுப் பிறவிப் பெருங் கடலைக் கடக்க வேண்டும்.

'உயிர்கள் முக்தி பெற்றுப் பேரின்ப நிலை அடைய வேண்டும்' என்று இறைவன் உயிர்களின் மீது கொண்ட கருணையால், அவற்றின் பரிபாக நிலைகளுக்கு ஏற்ப, மானிட வடிவம் தாங்கி அருட்குருவாய் எழுந்தருளி, தீட்சையின் மூலம் மலநீக்கத்தை அளிக்கிறான். முதல்வனின் இந்த அருட்செயல் அவனது ஐந் தொழில்களுள் அருளல் என்ற நிலையைக் கொண்டதாகும்.

சிவபெருமான் உயிர்களின் பக்குவத்திற்குத் தக்கபடி குருவாக எழுந்தருளி அருள் புரிவான் என்பதை,

> 'பருவங்கள் கண்டு குருமேனி கொண்டு
> கதி உய்க்கும் ஆதி பகவன்' என்பதனாலும்,
> 'வாய்த்த வினையொத்துழி மலப்பிணி அவிழ்த்து
> மூர்த்திகொடு வந்தருளி முக்திநலம் நல்கும்
> ஆத்த னிளசைப் பதியின் ஐந்தொழில் நடிக்கும்
> கூத்துடையவன் யாவன் அவன் யாங்கள்
> தொழுகோவே'

என்பதனாலும் அறியலாம்.

உயிர்கள் மூவகைப்படும். அவை விஞ்ஞான லர், பிரளயாகலர், சகலர் என்பனவாகும். அவற்றுள், மூலமலம் ஒன்றே உடைய விஞ்ஞான கலருக்கு இறைவன் அவர்களின் உயிருக்கு உயிராய் நின்று மலசக்தியைக் கெடுத்துத் தன்னை உணரும் மெய்யுணர்வைத் தோற்று விப்பான்.

ஆணவமலம், கன்மம் என்னும் இரண்டு மலங்களையுடைய பிரளயாகலருக்கு, முதல்வன் தனது அருட்திருமேனி காட்டி, மான், மழு, நான்கு தோள், கறைக்கண்டம், சடைமுடி யோடும் எழுந்தருளி, நோக்கு, ஸ்பரிசம், உரை என்னும் மூன்றாலும் மலங்கெடுத்து மெய்யுணர்வு அளிப்பான்.

இவ்வாறு இறைவன் தன்னிலையாகவும் முன்னிலையாகவும் நின்று, வேறு ஆதாரத்தைக் கொள்ளாமல் முதல்வனே செய்யும் தீட்சை முறைமைக்கு நிராதார தீட்சை என்று பெயர். ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் இவர்களுக்கு இறைவன் அருளிய முறை நிராதார தீட்சை என்பர்.

சீடனது வினைப்போகத்தால் ஆகாமிய வினை பெருகிக்கொண்டே போவதனால், குரு சீடனின் உடல் பொருள் ஆவி இவற்றைக் கைக்கொண்டு சீடனின் வினைப்பற்றை நீக்குவிப்பார். இதனைத் திருமூலரும் 'படர்வினை பற்றற' என்கிறார். எனவே வினைகெடுத்து ஞானத்தைக் கொடுப்பதே தீட்சையாகும். சத்குரு செய்யும் இந்தத் தீட்சை யானது சமய தீட்சை, விசேஷ தீட்சை, நிர்வாண தீட்சை, அபிஷேக தீட்சை என நான்கு வகைப்படும்.

சமய தீட்சை— சரியை மார்க்கத்தைத் தொடங்குமுன் செய்யப்படும் தீட்சையே சமய தீட்சை எனப்படும். இதனால் மந்திரம் உச்சரிப் பதற்கு உரிய தகுதியை அளிப்பதும், மூலகன்மத் தைத் துடைப்பதுமாகும். வேதாந்தமாகிய உபநிடதங்களின் முடிவுப்பொருளை உணர்ந்து, சிவபரத்துவம் உணர்ந்த பின்னரே சமய தீட்சைக்கு உரியவராவர்.

விசேஷ தீட்சை— இது கிரியை மார்க்கத்துக்கு உரியது. சமய தீட்சை பெற்ற சீடனைச் சிவ புத்திரனாக்குவது. மந்திரம், சிவபூசை, யோகம் ஆகியவற்றைச் செய்வதற்கு உரிய அதிகாரத்தை

அளிப்பது. இதனுல் மந்திர சுத்தியும் கர்ம நாசமும் ஏற்படும்.

நிர்வாண தீட்சை— இது யோகத்திற்கும் ஞானத்திற்கும் உரியது. சீடனின் சஞ்சித கர்மத்தை வறுத்த விதைபோல வலிமை இழக்கச் செய்து, மூலமலத்தின் வலிமையையும் நீக்கி, மூன்று பொருளான பதி பசு பாசம் ஆகியவை பற்றிய மெய்யுணர்வைப் பொது வகையால் விளக்கச் செய்வது. இதனுல் சாந்தியநீதை முதலான பஞ்ச கலைகளும் சுத்திபெறும். நிர்வாணதீட்சை சிவ தருமிணி, உலக தருமிணி என இரண்டு வகைப்படும். முதலாவது, சிகாச் சேதத்தோடு துறவிகளுக்குச் செய்யப்படுவது. இரண்டாவது சிகாச்சேதமில்லாமல் இல்லறத் தாருக்குச் செய்யப்படுவது.



இன்னும் நிர்வாண தீட்சை சத்தியோ நிர்வாணம், அசத்தியோ நிர்வாணம் என இருவகைப்படும். சத்தியோ நிர்வாணம் செய்த வுடன் முக்தி பயப்பது. அசத்தியோ நிர்வாணம் தேக முடிவில் முக்தி தருவது. உமாபதி சிவாசாரியாரிடம் சாம்பன் என்பவன் ஞான தீட்சை பெற்றவுடன் முக்தி அடைந்தான் என்பர்.

அபிஷேக தீட்சை— இது ஞானிகளுக்குச் செய்யும் தீட்சை முறையாகும். இதன் பயன் இடையருமல் சிவத்தன்மையைப் பெறுவதாகும். இதன் சிறப்பை ஞானிகள் மட்டுமே உணர முடியும். ஆதலால் இதை இடைச் செருகல் எனக் கருதுவோரும் உண்டு. அபிஷேக தீட்சை பெற்றவர்களுக்கு ஆன்மார்த்தம், பரார்த்தம் ஆகிய இரு முறையிலும் நித்திய நைமித்திக காமிய கன்மங்களிலும், பிரதிஷ்டை, தீட்சை முதலிய சகல கிரியைகளிலும் ஞானேபதேசம் செய்வதற்கும் பூரண அதிகாரம் உண்டு.

தீட்சை இரண்டு வகையாக விளங்கும். அவை நிர்ப்பீஜ தீட்சை, சபீஜ தீட்சை எனப்படும். மந்திரத்திற்கு மூலமாகிய பீஜாக்ஷரமின்றி மந்திரத்தை மாத்திரம் ஜபிக்கும்படி உபதேசித் தல் நிர்ப்பீஜம்.

மந்திரத்தோடு பீஜாக்ஷரத்தையும் சேர்த்து ஜபிக்கும்படி உபதேசித்தல் சபீஜ தீட்சை. பீஜம் - மூலம். நிர்ப்பீஜம் - பீஜமில்லாதது. சபீஜம் - பீஜத்தோடு கூடியது.

மேற்கூறிய தீட்சைகளைச் செய்யும் முறை ஏழு வகைப்படும். அவை நயனம், ஸ்பரிசம், வாசகம், மானஸம், மந்திரம், யோகம், அவுத்திரி என்பன வாம். இவற்றுள் முதல் ஆறும் சாம்பவி தீட்சை, விஞ்ஞான தீட்சை என்று கூறுவர். அவுத்திரி என்பது ஹோமத்தோடு செய்யும் தீட்சையாகும்.

நயன தீட்சை— குரு தனது அருட்பார்வை யால் சீடனை நோக்குதல் நயன தீட்சை அல்லது சட்சு தீட்சை எனப்பெறும். மீன் தன் பார்வை யால் முட்டைகளைக் குஞ்சாக்குவதைப் போல, ஆசாரியர் சிவபாவனையால் சீடனைப் பார்த்துப் பாச நீக்கம் செய்வார். இதனைத் திருமூலர் 'பற்றறப் பார்த்து' என்று கூறுகிருர். மெய் கண்ட நாயனுர் அருணந்தி சிவாசாரியா ரைத் தமது அருட்கண்ணுல் நோக்க அவரது ஆணவமலம் அகன்றதாக அறிகிறோம்.

ஸ்பரிச தீட்சை— குரு தமது கரத்தைச் சிவ அஸ்தமாகப் பாவித்துச் சீடனது சிரத்தில் வைத்து, அவனைப் பாசப் பிணியிலிருந்து விடுவித்தல். திருவடியை முடியில் வைத்தலும் இது போன்றதே ஆகும். பரிபூரண ஞானம் பெற்ற குருவின் ஸ்பரிசத்தால் சீடனுக்கு ஞானம் உண்டாகிறது. கோழி தன் முட்டையைச் சிற கோடு அணைத்துக் குஞ்சுகளை வெளிவரச் செய்வது போல, குரு சீடனைப் பக்குவப்படுத்திக் கர்மபாசத்தை விலக்குகிருர்.

வாசக தீட்சை— இது திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களைப் பொருளுடன் உபதே சித்தல், சித்தாந்த சாஸ்திரங்களின் இயல்பை உணர்த்தி அவற்ருல் அக இருளைப் போக்குதல்.

மானஸ தீட்சை— குரு தமது மனதால் சீடனது மனதைத் தன்வயப்படுத்துவது. இதனுல் சீடனது மனதைப் பற்றியுள்ள கர்மத்தின் வலிமை குறைகிறது. ஆமை கடற்கரையில் குழி தோண்டி முட்டையிட்டுப் பின்பு அந்த முட்டையை மனதால் நினைத்து வேகமாக வரும். அதன் மனவலிமையினுல் முட்டை குஞ்சா வதைப் போன்றது இது. குருவின் மனவலிமை யினுல் சீடன் பக்குவமாகிருன்.

மந்திர தீட்சை— ஐந்தெழுத்து, ஆறெழுத்து, எட்டெழுத்து முதலிய மந்திரங்களைக் குரு

சீடனுக்கு உபதேசித்து அருள்வது இது. இதனல் சீடனது பாவங்கள் நீங்கி ஞானம் உண்டாகும்.

**யோக தீட்சை—** மாணுக்கனது ஆன்மாவை யோகநெறியால் தன் உயிர்ப்போடு சேர்த்துக் கொண்டு போய்த் தனது சிவனறிவோடு கலக்கச் செய்து, பின்பு சீடனது அறிவை அவனிடம் நிறுத்தல், யோகமுறைகளைப் பயிற்றுவிப்பது முதலியன ஆகும்.

இவை ஆறும் தனித் தனி மாணுக்கர்களின் பக்குவங்களுக்குத் தக்கபடி செய்யும்போது சுதந்திரம் எனப்படும். அவுத்திரிக்கு அங்கமாகச் செய்யப்படுவன இரு வகைப்படும்.

**அவுத்திரி தீட்சை—** இது கிரியாவதி என்றும் ஞானவதி என்றும் இரு வகைப்படும். ஹோம குண்டத்தில் தீயை வளர்த்து, சீடனிடம் பற்றி நிற்கும் மலத்தை ஈர்த்துத் தீயில் தகித்து அவனைப் பரிசுத்தப் படுத்துவது கிரியாவதி யாகும். ஹோமத்தை மனதில் செய்வது ஞானவதியாகும்.

**தீட்சையின் பெருமை—** மேலே கூறிய திலிருந்து, தீட்சை என்பது ஆசாரியமூர்த்தியின் வாயிலாக நின்று முதல்வனே அத்துவ சுத் செய்து, மலமகற்றி, சிவம் பிரகாசிக்கச் செய்து, ஞானம் உண்டாக்கி, முக்தி பயக்க உதவும் முறை என்பது தெளிவாகிறது.

எனவே, குரு சீடனது பக்குவத்தை உணர்ந்து அவன் மனதைக் கசியச்செய்து, தமது சக்தியைப் பாய்ச்சி அவனுக்கு ஞானம் உண்டாக்கும் ஆற்றல் உடையவராய், மனக்குற்றம் உடற் குற்றம் இரண்டும் இல்லாதவராய், முப்பொருள் பற்றிய ஞானம் உடையவராய் இருத்தல் வேண்டும். சீடனும் குருவின் குணத்தையே கொண்டு குருவைப் போற்றிப் பூசித்து அவர் உபதேசித்தபடியே மந்திர கிரியா பாவனைகளை நன்கு தெரிந்து நிட்டைகூடல் வேண்டும்.

எனவே, ஆன்மாக்களின் சஞ்சிதம் ஆசாரியன் திருநோக்காலும், அத்துவ சுத்தியாலும் அழிய, பிராரப்தம் உடலோடு அழிய, ஆகாமியமும் ஆணவமும் ஞானத்தாலும் சிவோஹம்பாவனை யாலும் அழியும் என்பதனல், வினைநீக்கத்திற்குக் குருவும் தீட்சையும் இன்றியமையாதன என உணர்ந்து உய்தல் வேண்டும்.

## தீட்சை






# பகவான் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?

அ. வே. தனுஷ்கோடி

முன்பொரு காலத்தில் போதனு என்ற பரம பக்தர் ஆந்திர மாநிலத்தில் வசித்து வந்தார். கல்வியில் சிறந்த அவர் நாள்தோறும் பகவானின் சரித்திரத்தைப் பணிவுடனும் பக்திப் பரவசத்துடனும் பிரவசனம் செய்வது வழக்கம். அவரது சொற்பொழிவைப் படித்தவர்களும் பாமரர்களும் விரும்பிக் கேட்டார்கள். ஒரு நாள் போதனுவின் சொற்பொழிவைக் கேட்பதற்கு ஒரு பண்டிதர் வந்தார். அன்றைய தினம் கஜேந்திர மோட்சம் என்ற பகுதியைப் போதனு விளக்கிக்கொண்டிருந்தார். அப்போது அவர், ''கஜேந்திரன் என்ற யானை முதலை வாயில் அகப்பட்டுக்கொண்டது. அதிலிருந்து தப்பிக்க வழி இல்லாத கஜேந்திரன் பகவானை நினைத்து ஒரு தாமரைமலரை அர்ப்பித்து, 'ஹே நாராயணு!' என்று கூவியது. அது அப்படிக் கூவியதும் பகவான் விழுந்தடித்துக்கொண்டு கஜேந்திரன் இருந்த இடத்திற்கு ஓடோடி வந்தார். யானையின் கூக்குரல் கேட்ட சமயத்தில் பகவான் மகாலட்சுமியுடன் தாயம் விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது அவர் திருமகளின் கவனத்தை விளையாட்டில் திருப்புவதற்காக அவளது முன்றானையை இழுத்தார். அந்த நேரத்தில்தான் கஜேந்திரனின் அபயக் குரல் கேட்டது. உடனே பகவான் எல்லாவற்றையும் மறந்து, கஜேந்திரனைக் காப்பாற்றுவதற்காக ஓடினார். லட்சுமியின் முன்றானை கையில் இருந்ததனால் தேவியும் அவர் பின்னாலேயே ஓடினாள்'' என்று கதை சொல்லிக்கொண்டே போனார்.

சொற்பொழிவு முடிந்ததும் பண்டிதர் போதனுவைச் சந்தித்து, ''தாங்கள் நன்றாகத்தான் கதை சொல்கிறீர்கள். என்றாலும் பகவான் ஓட, தேவியும் அவர் பின்னால் ஓடினாள் என்றெல்லாம் சொல்லக் கூடாது. பகவான் எல்லா அலங்காரங்களுடன் கையில் சங்கு சக்கரம் கதை ஆகியவற்றை ஏந்தியபடி கருடனில் பறந்து வந்தார் என்று சொல்ல வேண்டும்'' என்று தெரிவித்தார்.

போதனு மறுநாள் அந்தப் பண்டிதர் வீட்டிற்குச் சென்றார். அப்போது வீட்டுக்கு வெளியில் பண்டிதரின் குழந்தை விளையாடிக்கொண்டிருந்தது. போதனு அந்தக் குழந்தைக்குத் தின்பண்டங்கள் கொடுத்து விட்டை விட்டு வெகு தூரம் தள்ளி அதை விளையாடச் செய்தார். பிறகு போதனு பண்டிதரின் விட்டுக் கிணற்றில் ஒரு பெரிய கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டு, வேகமாகப் பண்டிதரிடம் ஓடிச் சென்று, ''ஐயா! உங்கள் குழந்தை கிணற்றில் விழுந்துவிட்டது!'' என்று பரபரப்போடு கூறினார். அவ்வளவுதான், போதனு சொன்னதைக் கேட்டாரோ இல்லையோ, சாப்பிட்டுக்கொண்டிருந்த பண்டிதர் அலறி அடித்துக்கொண்டு, கையையும் கழுவாமல் கிணற்றுப் பக்கம் ஓடினார். அவர் பின்னாலேயே போதனுவும் விரைந்தார். அப்போது அவர் பண்டிதரிடம், ''என்ன இப்படி ஓடுகிறீர்கள்? கைகழுவ வேண்டாமா? கிணற்றிலிருந்து

குழந்தையைக் காப்பாற்றி வெளியேற்றுவதற்கு ஏணி கயிறு வேண்டாமா? துணைக்கு ஆட்கள் வேண்டாமா?" என்று கேட்டார். போதனுவின் கேள்விகளைக் காதில் போட்டுக் கொள்ளாத பண்டிதர், பரபரப்புடன் கிணற்றின் அருகில் சென்று உள்ளே எட்டிப் பார்த்தார். அப்போது அவரது குழந்தை "அப்பா!" என்று அழைத்துக்கொண்டே அவரது கால்களைக் கட்டிப் பிடித்தது.

பண்டிதர் திகைப்புடன் போதனுவை ஏறிட்டு நோக்கினுர்.

போதனு பண்டிதருக்குப் பின்வருமாறு உண்மையை விளக்கினுர்-"ஐயா! தங்கள் குழந்தை அபாயத்தில் இருக்கிறது என்று கேட்டதும் அதைக் காப்பாற்றுவதற்குத் தாங்கள் எவ்வளவு வேகமாக ஓடினீர்கள்? வேறு எதைப்பற்றியுமே தாங்கள் அப்போது யோசிக்கவில்லை. சாதாரண உலக அன்பே இப்படி இருக்குமானுல் தெய்வத்தின் பிரேமையும் கருணையும் எவ்வளவு மகத்தானவையாக இருக்கும்? ஆதலால்தான் பகவான் பக்தனைக் காக்க ஓடோடியும் வருகிருர்" என்ருர்.

பண்டிதர் தமது தவற்றை உணர்ந்தார். அவர் போதனு கூறிய விளக்கத்தை ஒப்புக் கொண்டார்.

நாம் பகவானது லீலைகளைப்பற்றிக் கேட்கும்போது வீண்வாதம் செய்யக்கூடாது. மாருக, புராணக் கதைகளிலும் மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் பொதிந்துள்ள சாரமான உட்கருத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். குலசேகராழ்வார் போலவும், கீதை கேட்ட பாமரனைப் போலவும் உணர்ச்சியுடன் அவற்றைக் கேட்டு வாழ்வில் பயன் பெற வேண்டும்.

## துளசிதாசர் காணும் ஸ்ரீராமன்



இறைவனே! கருணையின் திருவுருவமே தாங்கள்! நானே வறுமையில் உழல்பவன். நீங்கள்தாம் கர்த்தா. நான் பிச்சைக் காரன். அனைவரும் அறிந்த மகாபாவி நான்!

தங்களைக் காப்பாற்ற எவரும் இல்லாதவர்களுக்கு, அதிபதியும் தலைவரும் நீங்கள். இல்லாவிட்டால் என்னைப் போன்ற அநாதை களின் கதி? என்னைவிடத் துன்பப்பட்டவன் கிடையாது. தங்களைத் தவிர மனிதத் துயரைத் துடைத்தவர் இணையாகக் கிடையாது.

உண்மையின் உச்சம் நீங்கள். நான் ஒரு தனி ஆத்மா. நீங்கள் யஜமானர். நான் வேலைக்காரன். நீங்கள்தாம் என் தந்தை, தாய், தோழர், குரு, எல்லாக் கோணங்களிலும் என் நலன் விரும்புபவர். உங்களுக்கும் எனக்கும் உள்ள உறவு பல வகை யானது. தங்கள் விருப்பம் போல் என்னை நடத்தலாம். துளசி கேட்பதெல்லாம் அவனை முடிந்தவரை கரையேற்றுங்கள் என்பது தான்!

—விநய பத்ரிகா

# நான் பிரம்மமே

வி. ஆர். கணேசன்

மனிதனுகப் பிறந்தவன் பல இன்ப துன்பங் களுக்கு உள்ளாகி அநேக ஜன்மங்கள் எடுத் திருந்தும் மீண்டும் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து தப்ப முடியாமல் தவிக்கிருன்.

வாழ்க்கையில் நிகழும் எல்லா விதமான அனுபவங்களும் அவனவன் காரியங்களிலும் தொழிலிலும் ஈடுபடுவதனுல் உண்டாகின்றன.

நற்காரியங்களால் நன்மை உண்டாகிறது. தீய காரியங்களால் தீமை விளைகிறது. நன்மை யும் தீமையும் ஆகிய இரண்டுமே ஜீவாத்மாவைக் கட்டுப்படுத்துகின்றன.

ஒவ்வொரு காரியத்திஞல் உண்டாகும் பய னும், விருப்பு வெறுப்பு சினம் ஆசை முதலியவற் ருல் தூண்டப்பட்டு, அனுபவமாக மாறி மனதில் நினைவுகளாகப் பதிந்துவிடுகின்றன. இந்த நினைவுகளே சம்ஸ்காரங்களாகின்றன. இவை தாம் 'வாசனைகள்' என்று சொல்லப்படும் தன்மைக்கும் காரணமாகின்றன. வெளிப்படை யாகத் தோன்றுவதற்குத் தக்க வலிமை இல்லாத போதிலும் அந்தக்கரணத்தின் உள்ளே அடங்கியிருந்து தொழில் செய்யும் இயல் புடையன.

முன்பு சேமித்து வைத்திருந்த வாசனைகள்தாம் இன்று இருக்கும் நிலைமையை உருவாக்கு கின்றன.

எத்தகைய உடலில் இருந்துகொண்டு, எந்த விதமான தொழில்களிலும் காரியங்களிலும் ஈடுபட வேண்டுமோ, எந்த விதமான இன்ப துன்பங்களை அனுபவிக்க வேண்டுமோ—இவை எல்லாம் இந்தச் சம்ஸ்காரத்தின் பயனுக விளைந்தவையாகும்.

இந்தத் தருணத்தில் கடோபநிஷத்தில் கூறிய மந்திரத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம் (5-7):—

யோநிமந்யே ப்ரபத்யந்தே சரீரத்வாய
தேஹிந: ।
ஸ்தாணுமந்யே நுஸம்யந்தி யதாகர்ம
யதாச்ருதம் ॥

அதாவது—அவரவர் கர்மத்துக்கும் வித்யைக் கும் (ஞானத்துக்கும்) தக்கவாறு உடலை அடைவ தற்காக (மரணத்துக்குப் பிறகு) வெவ்வேறு யோனியை அடைகின்றனர். இன்னும் சிலர் (மிகத் தாழ்ந்ததான) தாவரநிலையையும் எய்து கின்றனர்.

இவ்விதமான பிறப்பு-இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெறுவதுதான் மோட்சம் (முக்தி) எனப்படும். அதற்கு, முக்கியமாக நன்மை தீமையாகிய இருவகைப் பந்தங்களினின்றும் விடுபட்டு, பற்றை அறவே ஒழித்து, உள்ளத் தூய்மை அடைய வேண்டும்.

மனித வாழ்க்கையின் லட்சியத்தையும், ஜகத்-ஜீவன்-பரப்பிரம்மம் ஆகிய மூன்றின் உறவைப் பற்றியும், ஆத்மஞானம் அடையும் மார்க்கத்தை யும் தீர ஆராய்ந்து, சுருதிகளில் கூறிய உண்மை களைக் குருமுகமாகக் கேட்டும், தானுகவே சிந்தித்தும், தியானம் செய்தும் அறிய வேண்டும். இதுதான் ஆத்மவிசாரம் (அல்லது பிரம்ம வித்யை) என்று சொல்லப்படுகிறது.

உபநிஷதங்களில் படிப்படியாக உண்மைகளைக் கூறி, ரிஷிகள் அவற்றிலுள்ள கருத்துக்களையும் முடிவுகளையும் சுருக்கமான வாக்கியங்களாகத் தெரிவித்துள்ளார்கள். இவற்றுக்குத்தான் மகா வாக்கியங்கள் என்று பெயர்.

இந்த மகா வாக்கியங்களையும், இவற்றின் அர்த்தத்தையும் ஆராய்ந்து, சிந்தித்துத் தியானம் செய்வதே ஆத்மஞானம் பெறுவதற்கு ஒரு நேர்வழியாகும்.

நான்கு மகா வாக்கியங்கள் மிகவும் முக்கிய மானவையாகக் கருதப்படுகின்றன.

1. 'ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம-தூய உணர்வே பிரம்மம்.' இது ரிக்வேதத்தில் ஐதரேய உப நிஷதத்தில் இடம் பெற்றுள்ளது. 'பிரம்மம் என்ருல் என்ன? அது எவ்விதம் அறியப்படு கிறது?' என்ற கேள்விகளுக்குப் பதில் சொல்வது போல உரைத்தல்; ஏனெனில் பிரம்மத்தை நேர்முக அனுபவமாகத்தான் அறிய முடியும்.

ஐம்புலன்களாலும்] சாதாரண மனுே புத்தி விவ காரங்களாலும் குறிப்பாக விவரிக்க முடியாது. இதை லக்ஷண வாக்கியம் என்று சொல்வார்கள்.

2. 'தத்த்வமஸி—அது நீயாகவே இருக் கிருய்.' சாமவேதத்தைச் சார்ந்த சாந்தோக்ய உபநிஷதத்தில் வரும் மகா வாக்கியம் இது. இதை உபதேச வாக்கியம் என்று சொல்வார்கள். ஆதிசங்கரர் இந்த மகா வாக்கியத்துக்கு, குருவும் சீடனும் உரையாடுவதைப் போன்று ஒரு விளக்கம் எழுதியிருக்கிருர். அந்த நூலுக்கு 'வாக்கியவ்ருத்தி' என்று பெயர்.

3. 'அயமாத்மா ப்ரஹ்ம—இந்த ஆத்மாவும் பிரம்மமே.' இது அதர்வ வேதத்தைச் சார்ந்த மாண்டுக்ய உபநிஷதத்தில் உரைக்கப்பட் டிருக்கும் முக்கியமான அனுபவ வாக்கியம். இந்த ஆத்மா பிரம்மம் என்று இருதயத்தில் விரலே வைத்துச் சுட்டிக் காட்டுவது போலிருக்கிறது.

4. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி—நான் பிரம்மமாக இருக்கிறேன்.' இது யஜுர்வேதத்தைச் சார்ந்த பிருகதாரண்யக உபநிஷதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. இது ஞானம் உதயமான வுடனேயே உண்டாகும் உணர்ச்சியைக் குறிக்கிறது.

மகா வாக்கியங்கள் சுருக்கமாக இருந்த போதிலும், ஆசாரியரைச் சிஷ்யன் முறையாக அணுகிக் கேட்டால், ஆசாரியர், தகுதி வாய்ந்த அந்தச் சிஷ்யனுக்கு, விரிவாகவும் தெளிவாகவும் வாக்கியார்த்தத்தை எடுத்துக் கூற மறுப்பதில்லே. பகவத்கீதையில் பகவான் சொல்லியிருக்கிறபடி, ''பிரம்மஞானம் அடைய விரும்புவோர், மிகப் பணிவுடனும், சூழ்ந்த கேள்விகளாலும், தொண்டு புரிவதனுலும் வேண்டிக்கொண்டால் ஞானியும் தத்துவதரிசியுமான ஆசாரியர் கட்டாயம் உபதேசம் செய்வார்.'' (4-34.)

இனி 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற மகா வாக்கியத்தை ஆராய்வோம்.

பிருகதாரண்யக உபநிஷதத்தில் (1-4-10), இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது :—

**ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்; ததாத்மாநு—**
**மேவாவேத் | அஹம் ப்ரஹ்மாஸ்மீதி | தஸ்மாத்**
**தத்ஸர்வமபவத் ||**

உலக சிருஷ்டி சமயத்தில் பரம்பொருள் ஜீவன்களின் உடல்களினுள் புகுந்துகொண்டு, அவற்றின் அந்தக்கரணத்துடன் இணைத்துக் கொண்டு செயற்பட்டது. ஆகையால் அந்த ஜீவன்களிலுள்ள ஆத்மா முதலிலேயே பிரம்மமாக இருந்தது. (அந்தக்கரணத்துடன் இணைக்கப் பட்ட போதிலும்) 'நான் பிரம்மமே' என்று அறிந்திருந்தது. இந்த உலகங்கள் முழுவதும் அதுவே ஆயிற்று.

அதாவது, பரம்பொருள்தான் எல்லா ஜீவனிடத்திலும் உறைந்திருக்கிற படியால் அவித்யையால் மறைக்கப்பட்டபோதிலும், அந்த அறியாமை என்ற திரை நீங்கியவுடன் பரப்பிரம்மம்தான் அந்த ஆத்மா என்று புலப் படுகிறது. இந்த உண்மையை அறிந்தவுடன் அந்த ஆத்மா பரப்பிரம்மமாகவே ஆகிறது.



அத்வைத வேதாந்தக் கிரந்தங்களில் முக்கிய மானதான பஞ்சதசியில், ஆசாரிய வித்யாரண்ய ஸ்வாமி இந்த மகா வாக்கியத்தின் விளக்கத்தை இரண்டு ச்லோகங்களில் குறிப்பிடுகிருர்—

**பரிபூர்ண: பராத்மாஸ்மிந்**
**தேஹே வித்யாதிகாரிணி |**
**புத்தே: ஸாக்ஷிதயா ஸ்தித்வா**
**ஸ்புரந்நஹமிதீர்யதே ।**

பரிபூர்ணமான (அதாவது தேச கால வஸ்து பேதமற்ற) பரம்பொருள்தான் ஜகத்தாகத் தோற்றம் தரும் உலகிலுள்ள எல்லா ஜீவன்களின் தேகத்தினுள் புகுந்து, புத்திக்குச் சாட்சி போல் இருந்துகொண்டிருக்கிறது. அதைத்தான் 'நான் (அஹம்)' என்னும் ஜீவாத்மாவாகச் சொல்லுகிருர்கள்.

**ஸ்வத: பூர்ண: பராத்மாத்ர**
**ப்ரஹ்மசப்தேந வர்ணித: |**
**அஸ்மீத்யைக்யபராமர்ச:**
**தேந ப்ரஹ்ம பவாம்யஹம் ||**

இயற்கையாகவே பரிபூர்ணமான ஆத்மாதான் பிரம்மம் என்ற சொல்லால் வர்ணிக்கப்படுகிறது. 'அஸ்மி' என்ற ஐக்கியத்தைக் காட்டும் சொல்லால் 'நான் பிரம்மமாகவே இருக்கிறேன்' என்று தெரிகிறது.

இந்த ஐக்கியத்தை உணர, எதைப்பற்றி எவ்வாறு தியானம் செய்ய வேண்டும் என்பதை இப்பொழுது கவனிப்போம்.

ஐம்புலன்களால் அறியப்படும் வெளிப் பொருள்களும், உள் உணர்ச்சிகளும், எண்ணங் களும் மனோ-புத்தியின் மூலமாகத்தான் நிகழ் கின்றன. இங்கு அறியப்படும் பொருள்களும் (Objects), அறிகிறவனும் (subject) வேறு என்று தெளிவாகவே இருக்கிறது.

ஆனால் 'நான்' என் மனதை அறிவேன், மாறி மாறி வரும் எண்ணங்களையும் அறிவேன் என்று ஆகும்பொழுது, 'அறிபவன்' மனோ-புத்திக்கு அப்பால் உள்ளான் என்று புலப்படுகிறது.

அந்த 'அறிபவனாகிய நான்' யார் என்று ஆராய்ந்துகொண்டே போனால், நான் உடல் அன்று, மனதும் அன்று, புத்தியும் அன்று, பிராணன்களும் அன்று என்று தெரிகிறது.

மேலும், இவற்றுக்கெல்லாம் பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, அழிவு, நோய், நாசம் என்ற பல விதமான மாறுதல்கள் மாறி மாறி உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. இவற்றினால் உண்டாகும் அனுபவங்களும் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறி மாறிக்கொண்டே இருக்கின்றன.

ஆகையால் இவற்றை 'அறிபவன்' மாறுத லற்று, இவற்றுக்கு அப்பால் இருக்க வேண்டும். அதுதான் 'நான்' அல்லது 'ஸத்' அல்லது 'தூய உணர்வு' என்று கண்டுகொள்கிறோம்.

மேலும், இந்தத் தூய உணர்வின் சாந்நித்தி யத்தில்தான் உடல், இந்திரியங்கள், மனம், புத்தி, பிராணன்கள் எல்லாமே செயற்படும் சக்தி பெற்று இயங்குகின்றன.

கனவுநிலையில் காணும் அனுபவங்களெல்லாம் [illegible] மிகவும் உண்மை போலவும், விழிப்பு நிலையிலுள்ள அனுபவம் போலவேயும் அமைவதை உணர்கிறோம்.

கனவு முடிந்து திடீரென்று விழித் தெழுந்தவுடன், 'அப்பாடா! என்ன பயங்கரமான (அல்லது சுகமான) கனவு கண்டேன்!' என்ற சொற்கள் தாமாக வெளிவருகின்றன.

அதே போல் நன்றாக, கனவற்ற நித்திரையி லிருந்து விழித்தெழுந்தவுடன், ''நான் வெகு சுகமாக உறங்கினேன். உறக்கத்தில் என்ன நடந்ததென்றே எனக்குத் தெரியாது'' என்று சொல்வதையும் கேட்டிருக்கிறோம்.

இவற்றையெல்லாம் உணர்கிற அந்த 'நான்' யார்? இவற்றினால் பாதிக்கப்படாமல், தூங்காமல் சாட்சி போல் பார்த்துக்கொண்டிருக்கிறேனே.

விழிப்பு, கனவு, நித்திரை ஆகிய மூன்று நிலைகளிலும் சாட்சி போல் (சுய அறிவுடன் அதாவது ஸ்வயம் பிரகாசம் என்று சொல்லப் படுகிற நிலையில்) இருக்கிற 'நான்'தான், அந்தத் 'தூய உணர்வு' என்று புலப்படுகிறது.

உதாரணமாக, குடத்தைப் பிரகாசிக்கச் செய்யும் தீபமானது எப்படிக் குடத்தினின்றும் வேறாக இருக்கிறதோ, அவ்வாறே இந்தத் 'தூய உணர்வு' (அல்லது ஆத்மா என்றும் சொல்ல லாம்) தனி அறிவினால் ஸ்வயம் பிரகாசமாக இருக்கிறது.

இந்த நிலையில் மற்றோர் அனுபவமும் உண் டாகும். அதாவது, அந்த நிர்க்குணமானதும், நித்தியமானதும், நிரதிசயானந்த ரூபமானதும், சர்வக்ஞனும், சர்வவியாபியானதும், சர்வசக்தி வாய்ந்ததும், வேதங்களில் சொல்லப்பட்டதுமான பரப்பிரம்மமும் நானேதான் என்ற அறிவு உண்டாகும். இந்த அறிவு புலப்பட்ட பிறகு மேலே அறிய வேண்டியது ஒன்றுமில்லை என்றும், எல்லாவற்றிற்கும் உறைவிடம் அந்தப் பிரம்மம் தான் என்ற உணர்வும் உண்டாகும்.

தன்னுள்ளேயே எல்லா ஜீவன்களும் இருப்ப தாகவும், எல்லா ஜீவன்களிடத்தும் தான் இருப்ப தாகவும் உணர்ந்து ஒரு சமபாவமும் ஏற்படும். இதுவே ஆத்மஞானம் என்று அறிய வேண்டும்.

இம்மாதிரிப் படிப்படியாக ஞானமார்க்கத்தில் மேலேறும் முயற்சி, த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்ற மூன்றுவித உறவுகளையும் கடந்து செல்வதைப் பார்க்கலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில், ராமாயணத்தில் ஆஞ்சநேயர் ராமபிரானிடம் சொல்வது குறிப்பிடத்தக்கது—

தேஹபுத்யா து தாஸோஹம்
ஜீவபுத்யா த்வதம்சக: |
ஆத்மபுத்யா த்வமேவாஹம்
இதி மே நிச்சிதா மதி: ||

''உடலுணர்வில் (மூழ்கியிருக்கும்போது) நான் உன் அடிமை. மனோ-புத்திப் பார்வையில் (அதாவது உபாதி பெற்ற ஜீவாத்மாவாக எண்ணும்போது) உனது அம்சமாக விளங்குகிறேன். என் உண்மை ஸ்வருபத்தில் நான் நீயேதான்.''

ஆத்மவிசாரத்தில் ஈடுபடுமுன்பு உள்ளத் தூய்மை பெற்றுத் தகுதி கொள்ள வேண்டும் என்று முன்னமே கூறினோம்.

சாதன சதுஷ்டயம் என்னும் 1. விவேகம், 2. வைராக்கியம், 3. ஷட் ஸம்பத்து (சம, தமாதி நற்குணங்களை அடைதல்), 4. முமுட்சுத்வம் (பரம்பொருளை அறிய வேண்டும் என்ற தீவிர ஆசை) ஆகிய நான்கு விதச் சாதனைகளையும் பெற்று, முதற்படியாகச் சகுணத் தியானம் செய்து ஈசுவரனின் அருளைப் பெற வேண்டும்.

அதன்பொருட்டு, பலனை எதிர்பாராமல் (கிடைத்த பலனைப் பகவானின் பிரசாதமாகக் கருதி), கர்மங்களைச் செய்துகொண்டே இஷ்ட தெய்வத்திடம் இடைவிடாத நிலையான பக்தியுடன் ஆத்மவிசாரத்தில் ஈடுபட வேண்டும்.

சுருதிகளில் கண்டுள்ள மகா வாக்கியத்தைப் பற்றிக் கேட்டும், படித்தும் (ச்ரவணம்), அவற்றின் அர்த்தத்தைப் பற்றிச் சிந்தனை செய்தும் (மனனம்), நித்யத் தியானத்தில் புக வேண்டும் (நிதித்யாஸனம்). அப்பொழுது தான் ஜீவ-பரமாத்ம-ஐக்கிய உணர்வு உண்டாகும்.

'ஞானம் (அறிவு) வந்தவுடன் நிரந்தர ஆனந்தம் குடிகொள்ளும் என்கிறார்களே, அது எங்ஙனம்?' என்ற கேள்வியும் எழக்கூடும்.

புலன்களாலாகிய அனுபவத்திலும் விருப்பம் பூர்த்தியாகித் திருப்தி அடைந்த நிலையில் ஒரு கணமேனும் மனதில் அமைதி ஏற்பட்டு ஓர் ஆனந்த அனுபவம் ஏற்படுவதைக் கவனித்திருக்கலாம்.

அதே போல், 'அஹம் ப்ரஹ்மாஸ்மி-நான் பிரம்மமாக இருக்கிறேன்' என்ற ஞானம் வந்தவுடன் மனதில் உண்டாகும் அத்யந்த சாந்தியினால், நீடிக்கும் ஆனந்தம் உண்டாகும் என்பதில் சிறிதேனும் சந்தேகமில்லை.

மகா வாக்கியத்தில் உறுதி கூறியிருப்பது போல், இந்த ஜன்மத்திலேயே உண்மையை உணர்ந்து ஞானம் பெற்று ஜீவன்முக்தர்களாக விளங்க இறைவன் திருவருள் புரிவாராக. ✽

# செய்திகள்

* செங்கல்பட்டு, ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப் பள்ளியில் மே 23-ஆம் நாள் காலை 9 முதல் 11 மணி வரை மாணவ மாணவியருக்கு சுவாமி கமலாத்மானந்தர் அறபோதனை வகுப்பு நடத்தினர்.

* செங்கல்பட்டு, ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பிரார்த்தனைக் கூடத்தில் மே 23 மாலை 5 மணிக்கு 'சுவாமி விவேகானந்தரும் இந்து மதமும்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினர்.

* செங்கல்பட்டு, ஸ்ரீபால விநாயகர் ஆலயத்தில் மே 23 இரவு 8 மணிக்கு 'கிருஷ்ண தத்துவம்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரை நிகழ்த்தினர்.

* பெரம்பூர், அன்னதான சமாஜம் மே 30-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழாவை விமரிசையாகக் கொண்டாடியது. சுவாமி கமலாத்மானந்தர் சிறப்புரையாற்றினர்.

* சென்னை, கிரிபித் ரோடு ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பள்ளியின் பிரார்த்தனை மண்டபத்தில் ஜூன் 3-ஆம் நாள் ஸ்ரீமத் சுவாமி பூதேசானந்தஜி மகராஜ் சொற்பொழிவாற்றினர்.

# துளசிதாசரின் உள்ளம்

திரட்டும் தமிழும் : எஸ். பி. ராஜகுமாரி

துளசிதாசர் ஸ்ரீராமபிரானிடம் பிரார்த்திப்பதைப் போலவும், தமக்குத் தாமே சொல்லிக்கொள்வதைப் போலவும் 'விநய பத்ரிகா' என்ற நூலை இயற்றியுள்ளார். அதிலிருந்து சில பகுதிகள் இங்கே தரப்பெறுகின்றன.

1. துளசிதாசனுடைய என் வாழ்நாட்கள் இது வரையிலும் வீணாகக் கழிந்துவிட்டன. ஆனால் இனிமேல் வீணாக விடமாட்டேன். ஸ்ரீராமரின் கிருபையால் உலகபந்தம் என்ற இரவு கழிந்து விட்டது. இப்பொழுது விழித்துக்கொண்ட பிறகு மீண்டும் படுக்கையை விரிக்கமாட்டேன். (விரக்தி அடைந்துவிட்டதனால் மீண்டும் மாயையில் விழ மாட்டேன்.)

நான் ராமநாமம் என்ற அழகிய சிந்தாமணியை அடைந்துவிட்டேன். அதை உள்ளம் என்னும் கையிலிருந்து கீழே நழுவ விடமாட்டேன். ஸ்ரீராமபிரானின் புனிதமான அழகிய மாநிற உருவம் என்ற உரைகல்லின் மீது என் மனம் என்னும் பொன்னை உரைப்பேன். (என் உள்ளத்தில் ஸ்ரீராமரைத் தியானிப்பேன்.)

இதுவரை நான் பிறர் வசம் இருந்தேன். இதை அறிந்த என் ஐம்புலன்களும் என்னைக் கண்டு நகைத்துக்கொண்டிருந்தன. ஆனால் இப்போதோ நான் என் வசமாகியிருக்கிறேன். எனவே பிறர் சிரிக்கும்படியாக இருக்கமாட்டேன். ஏனெனில் இப்பொழுது ஐம்புலன்களுக்கும் மனதிற்கும் நான் வசமாக இல்லை. எனவே அவை என்னைச் சிற்றின்பத்தின் பக்கம் இழுத்துச் செல்ல முடியாது.

என் மனம் என்ற வண்டைப் பகவானின் சரணாரவிந்தங்களில் நிச்சயம் அடையச் செய்வேன்.

2. ஏ நாவே! நீ ராம ராம என்று ராம நாமத்தை உரக்கச் சொல்லிக்கொண்டும், ராம ராம என்று ஜபித்துக்கொண்டும் ராமநாமத்தில் லயித்துவிடுவாயாக.

ஏ மனமே! ராமநாமம் என்ற அன்பெனும் மேகத்திற்குச் சாதகப் பறவை போன்று இருப்பாயாக. நதி ஏரி சமுத்திரம் ஆகியவற்றின் நீரின் மீது ஆசை வைக்காமல், ராமநாம பக்தியில் திளைத்து அதனால் ஏற்படும் அமுதமழைத் துளிக்காக அன்புத் தாகம் கொள்வாயாக. சாதகப் பறவையின் நண்பன் மேகம். அது சாதகப் பறவையின் அன்பைச் சோதிக்க எண்ணிக் கர்ஜித்து, இடி இடித்து ஆலங்கட்டி மழையைப் பொழியச் செய்கிறது. இறுதியில் சாதகப் பறவையின் அன்பும் உற்சாகமும் மேலும் மேலும் அதிகரிப்பதை அறிந்து மகிழ்ந்து மழையைப் பொழியச்செய்து அதைத் திருப்தி யடையச் செய்துவிடுகிறது.

எனவே நீயும் கஷ்டங்களில் மனதைப் பறி கொடுக்காமல் ராமநாமமே கதி என்று ராம நாமத்திலேயே புத்தியைச் செலுத்தி ராம நாமத்தின் பக்தனாக மாறிவிடுவாயாக.

இத்தகைய பக்தர்களாக யாரெல்லாம் இருக்கிறார்களோ, வருங்காலத்தில் இத்தகைய பக்தர்களாக யாரெல்லாம் மாறுகிறார்களோ அவர்களே இந்த மூவுலகிலும் பாக்கியவான்கள் ஆவர். ஒருவழிப் பாதை கடினமானது. இதில் நடக்கும்போது ஆங்காங்கே காணப்படும் நிழல்களைக்* கண்டு ஒரு க்ஷணமாவது வழியை மறந்துவிடாதே. துளசிதாசா! உன் வெற்றி யெல்லாம் சுயநலமின்றி இதைக் கடைப்பிடிப் பதிலேயே இருக்கிறது.

3. அட பைத்தியமே! ராம ராம என்று சதா ஜபித்துக்கொண்டிரு. இந்தப் பிறவிப் பெருங் கடல் கடப்பதற்கு அரிது. இதைக் கடப்பதற்கு ராமநாமமே தோணியாகும். ராமநாம ஜபம் என்ற இந்தச் சாதனையினால்தான் நீ எல்லாச் சௌபாக்கியங்களையும் அடைய முடியும்.

---

* இங்கே பெண், புதல்வர், செல்வம், சுகபோகம் ஆகிய வற்றை நிழல்களாகத் துளசிதாசர் குறிப்பிடுகிறார்.

ஏனெனில் யோகம், புலனடக்கம் ஆகிய எல்லா நல்வழிகளையும் கலியுகம் என்ற வியாதி பிடித்துள்ளது. இவற்றினால் எந்த நல்ல பயனும் ஏற்பட முடியாது. நல்லவரோ கெட்டவரோ, குடிசையில் இருந்தாலும், மாடியில் இருந்தாலும் இறுதியில் ராமநாமத்தினால் மட்டுமே எல்லோருக்கும் நற்கதி கிடைக்கும். இந்தப் பிறவி என்ற ஆகாசத் தோட்டத்தில்* பூவும் பழங்களும் தெரிகின்றன. அங்கே இருக்கும் புகைக் கோபுரத்தைக் கண்டு நீ மயங்கிப்போய்விடாதே.

ராமநாமத்தை விடுத்து வேறிடத்தில் நம்பிக்கை வைத்திருப்பவன், எதிரில் பரிமாறப் பட்டிருக்கும் உணவை அருந்தாமல் வேறு கவள அன்னத்தை எதிர்பார்க்கும் மூடனைப் போன்றவனே ஆவான்.

4. என்று வரை நீ நாவினால் ராம ராம என்று ஜபிக்கவில்லையோ அன்று வரை நீ எங்கே சென்றாலும் மூன்று தாபங்களாலும்† எரிந்து கொண்டிருப்பாய். அது வரை நீ கங்கைக் கரையில் இருந்தாலும் நீரின் சுகத்தை அடைய மாட்டாய்; கற்பக மரத்தின் அடியிலேயே நின்றாலும் உன் தரித்திரம் சதா உன்னிடம்தான் இருக்கும்; விழித்திருக்கும்போதும், நடக்கும் போதும், தூங்கும்போதும், ஏன், கனவில்கூட உனக்குச் சுகம் கிடைக்காது. ஜன்மஜன்மங்களுக்கும், யுகயுகங்களாக இந்த உலகில் அழுது கொண்டே இருப்பாய். எந்த அளவுக்கு உன்னை விடுவித்துக்கொள்ள முயற்சி செய்கிறாயோ, அந்த அளவுக்கு மேலும் மேலும் பிணைக்கப்படுவாய்.

இந்த நிலையில் நீ உண்ணும் உணவு அமுதத்தில் ஊறியதாகவே இருந்தாலும்கூட அது உனக்கு விஷமாகிவிடும். துளசிதாசா! மூன்று உலகிலும் உன்னைப் போல் கதியற்று இருப்பது யார்? அல்லது யார்தாம் இருப்பார்கள்? போதும், எவ்வாறு மீனுக்கு நீர்தான் ஆதாரமோ அதே போல் உனக்கு ராமநாமம் மட்டுமே நம்பிக்கை அளிப்பதாகும்.

---

* ஆகாயத்தில் உண்மையிலேயே தோட்டம் கிடையாது. எனினும் மேகங்கள் தோட்டம் போன்ற ஒரு பொய்யான தோற்றத்தைத் தரக்கூடும். அது போன்று இந்த உலகம் நம்பிக்கைக்கு உரியதல்ல. மேகங்களைப் போன்ற இந்த உலகின் பொய்த் தோற்றங்களைக் கண்டு இதன் மீது நம்பிக்கை கொள்ள லாகாது.

† மூன்று தாபங்கள்—ஆன்மிகம், தெய்விகம், பௌதிகம் ஆகிய மூன்றினால் விளையும் துன்பங்கள்.

---

மனசு பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கியிருக்கிறோம். அதைச் சுத்தப் படுத்தி மெழுகி, பகவானை அமர வைத்து, நாமும் அமைதியாக அமர்ந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிஷமாவது இப்படித் தியானம் செய்ய வேண்டும். லோகமே முழுகிப்போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் இது. ஏனெனில், லோகம் முழுகும்போதும் நமக்குக் கை கொடுப்பது இதுதான். —**காஞ்சிப் பெரியவர்**

---

5. மனமே! பின்னால் நீயே கையைப் பிசைந்து கொண்டு உன் மீது பச்சாத்தாபப்படுவாய். தேவர்களுக்கும் அரிதான மனித உடல் உனக்கு ஊனமின்றிக் கிடைத்திருக்கிறது. இதை அறிந்தும் நீ ஏன் வீணாகக் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறாய் என்பது தெரியவில்லையே!



பகவானிடம் விரோதித்துக்கொண்டு சுகத்தை அனுபவிக்க முயற்சி செய்வது, நெய்க்காகத் தண்ணீரைக் கடைவது போன்றது. இதைச் சிந்தித்து, தீய வழியையும் தீயவர்களோடு சேர்வதையும் விடுத்து, நல்லவர்களோடு சேர்ந்து நல்வழியில் நடப்பாயாக. ராமபக்தர்களைத் தரிசித்து அவர்களிடம் பகவானுடைய புகழைக் கேட்பாயாக; ராமநாமத்தை ஜபித்து ஸ்ரீராம பிரானின் புகழைப் பாடுவாயாக. கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி, முனிவர்களின் உடை யணிந்து, இடையில் அம்பறாத்தூணியைத் தரித்திருக்கும் பிரபுவை மனதில் நினைப்பாயாக.

துளசிதாசா! நீ பிரபஞ்சம் முழுவதையும் விட்டு ஸ்ரீராமபிரானின் திருவடிகளின் முன்பு தலை

வணங்கு. நீ பயப்பட வேண்டாம். ஏனெனில் உன்னைப் போன்ற பல நீசர்களையும்கூட ஜானகி வல்லபரான ஸ்ரீரகுநாதர் தம்முடையவர் ஆக்கிக் கொண்டிருக்கிறார்.

6. மனமே! பகவான் மாதவரின் பக்கம் சிறிது பார்ப்பாயாக. மூடனே! கேள். ஏழை எப்படித் தன்னிடம் இருக்கும் செல்வத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறானே, அது போலவே நீயும் மிகவும் தயாளகுணம் கொண்ட பரமாத்மாவையே நினைத்துக்கொண்டிரு.

அவர் அழகு, நல்லொழுக்கம், ஞானம், நற்குணம் ஆகியவற்றின் இருப்பிடம்; பக்தர்களை மகிழ்விப்பவர்; எல்லாப் பாவங்களையும் நசிக்கச் செய்பவர்; சிற்றின்பத்தின் குற்றங்களைப் போக்குபவர்.



துளசிதாசா! நீ யோகம், வேள்வி, விரதம், புலனடக்கம் இவை யாவும் இன்றியே இந்தப் பிறவிப் பெருங்கடலைக் கடக்க விரும்புவாயானால் இரவும் பகலும் பகவானின் திருவடிநிழலை மறவாமல் நினைப்பாயாக.

7. உலகைக் காக்கும் ஸ்ரீராமசந்திரப் பிரபுவே! துளசிதாசனாகிய என் மனம் தன் பிடிவாதத்தை விடுவதாக இல்லை. தலைவனே! இரவும் பகலும் அதற்குப் பல விதங்களிலும் உபதேசம் செய்துகொண்டிருக்கிறேன். ஆயினும் அது தன் சுபாவத்துடனேயே இருக்கிறது.

பெண்கள் பிரசவிக்கும்போது பெரும் கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள். எனினும், சுகப் பிரசவமானதும் அந்தத் துன்பத்தை யெல்லாம் மறந்து சந்தோஷமடைந்து, மீண்டும் அந்தத் துன்பத்தை அளித்த கணவரின் புகழைப்

---

ஆண்டவன் தந்த வேதனைகளைக் குணமாக்கும் வைத்தியம், அவனிடமே அனைத்தையும் ஒப்புவிப்பதுதான். —ஒரு ஞானி

கோல் கொண்டு பசுக்களை இடையன் புல்வெளிக்கு ஓட்டிச் செல்வதைப் போல மூப்பும் சாக்காடும் உயிர்களை மறுபிறவிக்கு ஓட்டிச் செல்கின்றன. —தம்மபதம்

---

பாட ஆரம்பித்துவிடுகிறார்கள். பேராசையுடைய குடும்பஸ்தன் செல்லும் இடங்களிலெல்லாம் பணக்காரர்கள் அவனைச் செருப்பால் அடிக்கின்றனர். எனினும், அந்தக் குடும்பஸ்தன் மீண்டும் அதே இடங்களுக்குச் செல்வதற்குக் கொஞ்சமும் வெட்கமடைவதில்லை.

அது போன்று நான் பல வகைகளிலும் முயற்சி செய்து தோல்வியடைந்துவிட்டேன். இந்த என் மனம் மிகவும் பலசாலியாக இருக்கிறது; இதை என்னால் வெற்றிகொள்ள இயலாது. நீ கட்டளையிட்டால்தான் இந்த மனம் கட்டுக்கு அடங்கும்.

8. ஹே ரகுவீரா! துளசிதாசனாகிய நான் உன்னிடம் வேண்டுவதெல்லாம் இந்த உயிரின் அறியாமையையும் பிறவற்றின் மீதிருக்கும் ஆசைகளையும் நம்பிக்கைகளையும் தூர விலக்க வேண்டும் என்பதே.

முக்தி, பேரறிவு, செல்வம், காரியசித்தி, உயர்ந்த நிலை ஆகியவற்றுள் எதையுமே நான் விரும்பவில்லை. ஹே ராமா! உன் தாமரைத் திருவடிகளில் எனது தன்னலமற்ற அன்பு நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே போனால் போதும். இந்த என் கொடிய கர்மவினைகள் வலுக்கட்டாயமாக எங்கெங்கே பிறப்பெடுக்க வைக்கின்றனவோ அங்கெல்லாம், எவ்வாறு ஆமை தன் முட்டையை மறந்துவிடாமல் பாதுகாக்கிறதோ அவ்வாறே ஒரு க்ஷணநேரம்கூட உன் கருணையை விலக்காமல் இருப்பாயாக. எனது அன்பு, நம்பிக்கை, உறவு ஆகியவை எவ்வளவு தூரம் பரந்திருக்கின்றனவோ, அவை யாவும் ஓர் இடத்தில் சேர்ந்து பரமாத்மாவிடமே இருப்பனவாக இருக்கட்டும்.

# சுவாமி பிரேமானந்தர்

பாபுராம் (சுவாமி பிரேமானந்தர்) ஓர் உயர் குடியில் பிறந்து, சிறப்பான முறையில் வளர்க்கப் பட்டவர். லௌகிக வாழ்வில் உழலும் இந்த உலகத்தவரைப் போன்று சாதாரணப் பிறவியாக இல்லாமல், அவர் இளவயதிலேயே தனித் தன்மையுடன் திகழ்ந்தார். அவரது நடத்தைகள் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டுக் காணப் பட்டன.

சிறுவயதில் யாராவது அவரிடம் வந்து திருமணத்தைப்பற்றிக் கூறினல், உடனே தமது மழலை மாருத சொல்லினல், ''கல்யாணம் வேண்டாம், வேண்டாம், நான் செத்துப்போய் விடுவேன்'' என்று சொல்வாராம்.

பாபுராம் சிறுவராக இருந்தபோது நதியில் நீராடச் செல்வதுண்டு. அப்போது அங்கே துறவிகளைக் கண்டால் தம்மை மறந்து, அவர்களுடன் நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருப்பார். அவர் எட்டு வயதுச் சிறுவராக இருந்தபோதே, தாம் துறவிகளுடன் சேர்ந்து உலகத்தார் கண்ணில் படாமல் எளிமையான ஆசிரம வாழ்க்கை நடத்துவது போன்ற இனிய கற்பனையில் அடிக்கடி ஆழ்ந்து விடுவது வழக்கம்.

முதன்முதலாகத் தட்சிணேசுவரத்தில் சந்தித்த அன்றே ஸ்ரீராமகிருஷ்ணர் பாபுராமைத் தமக்கு உகந்தவராக ஏற்றுக்கொண்டார். பாபுராமின் அழகிய மிருதுவான உடலமைப்பு, எடுப்பான தோற்றம், பக்தி மிகுந்த எளிமையான நடத்தை முதலிய சிறப்பான அம்சங்களைப் பார்த்து, அன்னை பராசக்தி தனது தெய்வாம்சம் பொருந்தியவர்களாக யாரையெல்லாம் நிர்ணயித் திருக்கிருளோ அவர்களில் மிகவும் சிறந்தவர் இவரே என்று ஸ்ரீராமகிருஷ்ணர் தெளிவாக உணர்ந்துகொண்டார்.

''ராதையின் அம்சமாகப் பிறந்தவர் பாபுராம்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டுள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சீடர்களின் மீது கொண் டிருந்த அன்பைக் குறிப்பிட்டுப் பிற்காலத்தில் பாபுராம் மகராஜ் மடத்துத் துறவிகளிடமும் பிரம்மசாரிகளிடமும் கீழ்க்கண்டவாறு கூறி யுள்ளார் :— ''நான் உங்களிடம் அன்பாக இருக்கிறேனு? உண்மையாக அன்பு செலுத்தி னேனுனல் நீங்கள் உயிருள்ளவரை எனக்கு அடிமைகளாகி விடுவீர்கள். ஆகா! ஸ்ரீராம கிருஷ்ணர் எங்களிடம் எவ்வளவு அன்பு வைத்திருந்தார்! அதில் நூற்றில் ஒரு பங்குகூட உங்களிடம் காட்ட முடியவில்லை. சில சமயம் இரவு அவருக்கு விசிறிக்கொண்டிருக்கும்போது உறங்கிவிடுவேன். உடனே அவர் என்னைக் கொசுவலைக்குள் இழுத்துப் படுக்கையில் படுக்க வைப்பார். நான் வேண்டாம் என்று மறுப்பேன். அவருடைய படுக்கையை நான் உபயோகிப்பது சரியா? அதற்கு அவர், 'வெளியே உன்னைக் கொசுக்கள் கடித்துப் பிடுங்கிவிடும். தேவை யானல் நானே உன்னை எழுப்பிவிடுகிறேன்' என்பார். இத்தகைய பேரன்பை எவரிடம் காண முடியும்? குருதேவருக்குச் சீடர்களிடம் இருந்த அன்பைக் கூற வார்த்தையே இல்லை'' என்று குறிப்பிட்டு, ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பில் லயித்துவிடுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பாபுராமைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''உயர்ந்த ஆன்மிக நிலையைச் சேர்ந்தவன். உள்ளெலும்பு வரை பரிசுத்தம்'' என்று குறிப்பிடுவார்.

ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணர் பரவச நிலையில் இருந்தார். அப்போது அவர், கழுத்தில் மாலையணிந்து தோழிகள் சூழ வரும் ஜகன் மாதாவின் உருவமாகப் பாபுராமைக் கண்டார்.

தட்சிணேச்வரத்திற்கு வரும் பக்தர்களில் பலருக்கு, பாவசமாதிநிலை ஏற்படுவதைக் கண்ட பாபுராம், ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''எனக்குப் பரவச நிலை ஏற்படும்படி செய்யுங் களேன்'' என்ருர். ஸ்ரீராமகிருஷ்ணரோ, ''என் விருப்பத்தால் என்ன நடக்கும்? அன்னை பராசக்தி விரும்பவில்லையானல் ஒன்றும் நடக்காது'' என்ருர். ஆனல் பாபுராம் பிடிவாதமாக,

---

தம்பட்டம் உரத்த சத்தம், உள்ளே காலி; தற் பெருமை பேசுவோன் தனக்கு இல்லாத சிறப்பை இருப்பதாகப் பறையடித்துப் போலிப் புகழ் தேடுகிருன். உள்ளே அவன் வெறும் குடுக்கை தான். —சுத்தானந்த பாரதி

''நீங்கள் செய்துதான் ஆகவேண்டும்'' என்றார். வேறு வழியின்றி ஜகதம்பிகையின் திருவடிகளில் இந்த வேண்டுகோளைச் சமர்ப்பித்தார் பரம ஹம்சர்.

''பாபுராமிற்குப் பரவச நிலை ஏற்படாது. ஆன்மஞானமே உண்டாகும்'' என்ற பதில் கிடைத்தது.

ஒரு சமயம் பாபுராம் மகராஜ், ஸ்ரீராம கிருஷ்ணர் வழங்கும் உபதேச முறைபற்றி, ''அவர் இல்லறத்தார்க்கு ஒரு விதமாகவும், துறவறத்தார்க்கு வேறு விதமாகவும் உபதேசம் வழங்குவார். அறையில் இல்லற அடியார் யாரும் இல்லையானால், கதவை மூடிவிட்டுத் தியானத்தைப் பற்றியும், தீவிர வைராக்கி யத்தைப்பற்றியும் போதிப்பார். இடையிடையே உலகப் பற்றுள்ளவர் யாரேனும் வந்திருக் கிறார்களா என்று வெளியே எட்டிப் பார்த்துவிட்டு வருவார். பெண்ணையும் பொருளையும்பற்றிக் கூறும்பொழுது, தம் மொழிகளில் வெறுப்பு உண்டாக்கிவிடாத வண்ணம் அவற்றுக்கு உவமைகள் கூறி விளக்குவார். அவருடைய எளிமையான உவமைகள் மனதில் நன்றாகப் பதிந்துவிடும்'' என்பார்.

மற்றொரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் பாபுராமிடம் பெண்களின் கவர்ச்சியிலிருந்து விடுபட்டு விலகியே இருக்க வேண்டும் என்று கூறினார். அன்று ஸ்ரீராமகிருஷ்ணர் பலராம் போஸ் இல்லத்தில் தங்கியிருந்தார். குருமகராஜ் கைகளைக் கழுவிக்கொள்வதற்காகப் பாபுராம் நீர் ஊற்றிக்கொண்டிருந்தார். அந்த வீட்டின் ஓர் அறையில் பெண்களுக்கான பள்ளி நடந்து கொண்டிருந்தது. பாபுராம் நீர் ஊற்றிக் கொண்டிருந்த சமயம் ஓர் இளம்பெண் தன் முன்றானையில் முடிந்துகொண்டிருந்த சாவிக் கொத்தை ஆட்டியபடி 'ஜல் ஜல்' என்று ஓசைப் படுத்திக்கொண்டிருந்தாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இதனைப் பாபுராமின் கவனத்திற்குக் கொண்டு வந்து, ''பார், பார். பெண்களெல்லாம் இப்படித்தான்; ஆண்களைத் தங்கள் முன்றானையில் முடிந்து சுழற்றிக் கொண்டிருப்பார்கள். நீயும் இந்த மாதிரிதான் அவர்கள் கையில் அகப்பட்டுச் சுழல விரும்புகிறாயா?'' என்று கேட்டார்,

---

இறைவனுக்குப் பக்கத்தில் நில்லுங்கள். நீங்கள் உறுதியாக நிற்க முடியும். இறைவ னிடத்தில் சாந்தியை நாடுங்கள். நீங்கள் சாந்தி பெற முடியும். —ஒரு முனிவர்

கீழே இருப்பது நான், மேலே இருப்பது நான், பின்புறம் இருப்பது நான், முன்புறம் இருப்பது நான், வலப் புறம் இருப்பது நான், இடப் புறம் இருப்பது நான், அனைத்துமாய் இருப்பது நானே. —ரிபு கீதை

---

ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களை உபசரிக்கும் முறையைக் குறிப்பிட்டு, பாபுராம் மகராஜ், ''ஸ்ரீராமகிருஷ்ணரிடம் யார் வந்தாலும் அவர்களைப் பல விதமாக உபசரிப்பார். 'வெற்றிலை பாக்கு வேண்டுமா?' என்று கேட்பார். 'வேண்டாம்' என்றால் 'புகையிலை வேண்டுமா?' என்பார். அப்படிக் கொடுத்துக் கொடுத்துத் தான் எங்களுக்கு உபசாரம் செய்யும் பழக்கம் உண்டாயிற்று'' என்று சொல்வது வழக்கம். பக்தர்களைப் பேணும் வழக்கத்தை ஸ்ரீராம கிருஷ்ணரிடமிருந்து பாபுராம் மகராஜ் முழுமை யாகப் பெற்றுக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மகாசமாதி அடைந்த பிறகு, 1886-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பாபுராம் மகராஜ் துறவு வாழ்வை மேற் கொண்டார். அதன் பிறகு அவரது பெயர் சுவாமி பிரேமானந்தர் என்று ஆயிற்று. அதன் பிறகு சுவாமி பிரேமானந்தர் ஆழ்ந்த தியானத்திலும், கடுமையான தவத்திலும் ஈடுபட்டு, எப்பொழுதும் ஸ்ரீராமகிருஷ்ணரின் நினைவிலேயே ஈடுபட்டிருந் தார்.

சுவாமி பிரேமானந்தர் எவ்வாறு ஸ்ரீராம கிருஷ்ணரிடம் ஒன்றியிருந்தார் என்பதற்குச் சான்றாக அவர் சுவாமி துரியானந்தருக்கு எழுதிய கடிதமே உணர்த்துகிறது. அதில், ''உங்களிடம் பிரபு ஸ்ரீராமகிருஷ்ணரைத் தவிர வேறு யாருக்கும் இடம் இருக்கக்கூடாது. மடத்தில் ஒரு நாள் நடந்த நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. அப்போது மடம் பாக்பஜாரில் இருந்தது. அன்று நான் பார்த்த எல்லாப் பொருள்களிலிருந்தும் ஸ்ரீராமகிருஷ்ணரின் நினைவே எனக்கு உண்டாயிற்று. 'எங்கெங்கு நோக்கினும்

ஸ்ரீகிருஷ்ணனே உதித்தெழுந்தான்' என்பது சொல்லுக்குச் சொல் உண்மை என்பதை அன்று கண்டுகொண்டேன். ஸ்ரீராமகிருஷ்ணரை நினைவுக்குக் கொண்டுவராத பொருளே இல்லை. உனக்கு நினைவில் இருக்கிறதோ என்னவோ, எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கோ அது வெகு நாளாக மிகவும் அழுத்தமாகப் பதிந்து விட்டது. அவருள் கலந்துவிடுவது என்பது இதனையே குறிப்பிடுகிறது என்பதை அன்று உணர்ந்துகொண்டேன்'' என்று எழுதியுள்ளார்.

சுவாமி பிரேமானந்தர், உப்புப் பொம்மை கடலில் கரைவதைப் போல, ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்திவெள்ளத்தில் அழுந்திக் கரைந்திருந்தார். அவர் எங்கும் எல்லாவற்றிலும் ஸ்ரீராம கிருஷ்ணரின் சின்மய தரிசனத்தையே கண்டார்.

ஒரு சமயம் அவர் காசியில் இருந்தபொழுது ஜீவன்முக்தரான திரைலிங்க சுவாமியைத் தரிசித்தார். மீண்டும் 1895-ஆம் ஆண்டு வட இந்தியாவில் தீர்த்தயாத்திரை செய்யும் வழியில் பிருந்தாவனம் சென்று, சிலநாள் 'காலாபாபுவின் குஞ்ச'த்தில் தங்கினர். அந்த நாள் முழுவதும் தியானத்திலேயே மூழ்கிவிடுவார். பின்னரே ஆலய தரிசனத்திற்குச் செல்வார். சில நாட்களுக்குப் பின் பிரம்மசாரி காளிகிருஷ்ணர் (சுவாமி விரஜானந்தர்) அவருடன் சேர்ந்து கொண்டார். அதன்பிறகு ஊஞ்சல் திருவிழாவின் பொழுது இருவரும் பக்தமால் எனப் பெயர் கொண்ட வைணவத் துறவி ஒருவருடன் சேர்ந்து யாத்திரையைத் தொடங்கினர்கள். கல்லும் முள்ளும் நிறைந்து கடினமான பாதைகளில் நடக்க நேர்ந்ததனுல் பக்தமால், சுவாமி பிரேமானந்தரைக் காலணிகள் வாங்கிக் கொள்ளும்படி கூறினர்.

ஆனால் பிருந்தாவனத்தின் புண்ணிய பூமியில் காலணிகளுடன் நடப்பது சரியல்ல என்று எண்ணியவர் சுவாமி பிரேமானந்தர். எனவே காலணியின்றி வெறும் பாதத்துடனே புனித யாத்திரையைத் தொடர்ந்தார். இந்த யாத்திரையின்போது பெரும்பாலும் பக்தமாலே இவர்கள் பொருட்டுப் பிக்ஷை எடுத்துக்கொண்டு வருவார். ராதை பிறந்த மண்ணில் சில நாட்கள் தங்கினர். அங்கு இருந்த பெண்களைக் கோபியராகவே கருதி, சுவாமி பிரேமானந்தர், நிலத்தில் விழுந்து வணங்கினர்.

சுவாமி பிரேமானந்தரின் பக்தி முதிர முதிர, அவர் எல்லாவற்றையும் தெய்வமாகவே கண்டார். மண்ணில்கூடக் காலணியோடு நடக்க அவர் மனம் இடம் தரவில்லை.



அஞ்சி ஒடுங்கிக்கொண்டிருக்கும் மக்கள் சேற்றிலே வேரற்றுக் கிடக்கும் செடி கொடிகளைப் போல் அழுகிப் போவர். —மாக்ஸிம கார்க்கி

உள்ளொளியை உணர்ந்தாலன்றி மக்களின் மயக்க இருள் ஒழியாது. பிறவிக் கடல் கடந்து பேரின்ப நிலையைப் பெறுவதும் சாத்தியமில்லை. —ஞானனந்தா

பயந்து சரண் அடைந்தவனைக் காப்பவன், எல்லா வகையிலும் பூரணமான அசுவமேத யாகத்தின் பலனைக்காட்டிலும் அதிகமான பலனை அடைகிறன். —பஞ்சதந்திரம்

# புறம் கூறுவது ஏன்?

கி. வா. ஜகந்நாதன்

காரைக்காலம்மையார் தசையெல்லாம் கழன்று என்பே வடிவாய்ப் பேயாக நின்றார். தம்மை மணந்த கணவன், 'இவர் தெய்வம்; இவரோடு வாழ்வது தகாது' என்று மதுரை சென்று வேறு ஒரு பெண்ணை மணந்து வாழ்ந்தான். அவனிடம் உறவினர்கள் அம்மையாரை அழைத்துச் சென்றபோது அவன் அவரை வணங்கினான். ''இவர் தெய்வம் என்று அஞ்சி இங்கே வந்தேன்'' என்றான். பிறகு அவனுக்குப் பயன்படாத இந்த அழகு வேண்டாவென்று எண்ணி, இறைவனை வேண்டிப் பேயுருவம் கொண்டார்.

அவர் அவ்வாறு ஆனதைக் கண்டு சிலர் பழி கூறினார்கள். ''இவள் வாழ்வை இழந்தாள்'' என்று தம்முள் பேசிக்கொண்டார்கள்; புறம் கூறினார்கள்.

இந்தச் செய்தி அம்மையாருக்குத் தெரிந்தது. 'பாவம்! அறியாமையையுடைய மக்கள்' என்று எண்ணிச் சிரித்துக்கொண்டார். 'நமக்குக் கிடைத்திருக்கும் பேரின்ப வாழ்வைப் பற்றி அறிந்துகொள்ளாமல் இப்படிப் புறங் கூறுகிறார்களே! இம்மை வாழ்விலும் மறுமை வாழ்விலும் நமக்குக் கிடைத்த பேறு வேறு யாருக்குக் கிடைக்கும்?' என்று பெருமிதம் கொண்டார்.

தன்னுடைய சிரத்தில் அலைகள் நிரம்பிய கங்கையை அணிந்தவன் சிவபெருமான். அந்தச் செஞ்சடை கங்கைக்குப் புகலிடம் அளித்திருக்கிறது. அவனுடைய சடையும் சிவந்தது. திருவடியும் சிவந்தது. அந்தச் சேவடிக்கே ஆளாகி அதன் கீழேயிருந்து என்றும் பணிந்து வாழும் வாழ்வு அம்மையாருக்குக் கிடைத்தது.

திரைமருவு செஞ்சடையான்
சேவடிககே ஆளாய்.

இறைவனுடைய திருவடித் தொண்டைப் புரிவதோடு அவனுடைய புகழைப் பேசும் வாய்ப்பும் அம்மையாருக்குக் கிடைத்தது. அவருடைய உடம்பு இறைவன் அடிக்கீழ்ப் பணிந்து நின்றது. அவருடைய வாக்கு இறைவனைப் பற்றியே பேசியது; அவன் புகழைப் பாடியது. அந்தப் பாடல்களை இன்று நாமும் ஓதி இன்புறுகிறோம்.

உரை மருவி.

இறைவனுடைய புகழை உரையிலே பொருந்தப் பாடும் அம்மையாருக்கு மெய்ஞ் ஞானம் உண்டாயிற்று. அவருக்கு நல்லுணர்வு பிறந்தது.

அந்த உணர்விலால் மெய்ப்பொருள் இன்னதென்பதை உணர்ந்தார். உலகியல் வாழ்வை அவர் தியாகம் செய்து உதறிவிட்டாலும் இந்த மெய்ஞ்ஞான வாழ்வை அவர் பெற்றார். அதைப் பெருமிதத்தோடு சொல்கிறார்.



உரைமருவி, யாம் உணர்ந்தோம்
கண்டீர்!

தம்மைப் புறங்கூறும் மக்களுக்குச் சொல்வது போலச் சொல்கிறார். போலியான புற வாழ்க்கையின் ஆடம்பரங்களைக் கண்டு மெச்சி மகிழும் உலகியலுள்ளம் படைத்தவர்களுக்கு இந்த அருமைப்பாடு தெரியாது. அவர்கள், அம்மையார் தம் வாழ்வை இழந்துவிட்டார் என்று பேசினார்கள். பாவம்! அவர்களுக்கு என்ன தெரியும்? ''இதோ பாருங்கள்; இதை உணர்ந்து கொள்ளுங்கள். உடல், உரை, உள்ளம் என்னும் மூன்று கரணங்களும் இறைவனோடு இணைந்த பேரின்ப வாழ்வல்லவா எமக்குக் கிடைத்திருக்கிறது? இதைத் தெரிந்துகொள்ளாமல் புறம் உரைக்கிறீர்களே! எமது நிலையை நீங்கள் நன்றாக அறிந்துகொள்ளுங்கள்'' என்கிறார்.

தெரிமினே.

''இப்படி ஆனதால் உமக்கு என்ன கிடைத்தது?'' என்று கேட்கிருர்கள் உலகத்தினர்.

''இம்மையில் புகழும் அம்மையில் அருளின்பமும் கிடைப்பதுதான் வாழ்க்கையின் பயன். இம்மையில் இறைவன் அடியை அகலாத இன்பம் கிடைத்தது. அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லை. மற்ற ஏது இருந்தாலும் இறைவன் அருள் இல்லாவிட்டால் என்ன பயன்? அந்த அருள் கிடைத்தால் கிடைக்காதது என்ன? இம்மைக்கும் அம்மைக்கும் எவை கிடைக்க வேண்டுமோ, அவை யாவும் எமக்குக் கிடைத்திருக்கின்றன. உடம்புக்கு இன்பம் கிடைப்பதுதான உண்மையான நிலை? உயிருக்கே இன்பம் கிடைத்திருக்கிறது. இம்மையிலேயே அது கிடைத்துவிட்டது. அவன் அருள் பெற்றதனுல் எமக்கு எல்லாம் அமைந்திருக்கின்றன. குறைவிலா நிறைவாகிய அப்பனுடைய பேரருளில் முக்குளிக்கும் எமக்கு ஏது குறை? நாம் எல்லாம் அமைந்தோம்.''

இம்மைக்கும் அம்மைக்கும்
எல்லாம் அமைந்தோமே.

''இப்படி இருக்க, எம்மைப்பற்றிப் புறத்தே பழித்துப் பேசுவது ஏன்? எம்மைக் குறை கூறுபவர்கள் இம்மையிலும் குறையில்லாமல் வாழ்வதில்லை. அம்மையைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதே இல்லை. அவ்வாறு உள்ள தம் நிலையை எண்ணிப் பாராமல் யாம் என்னவோ வாழ்க்கையை வீணடித்துவிட்டதாகப் பேசிக்கொள்கிருர்களே! இது என்ன பேதைமை?''

எம்மைப் புறம் உரைப்பது என்?

''நேரே எம்மிடம் சொன்னுல் அவர்களுக்கு எம்முடைய மனநிறைவை எடுத்து விளக்கியிருப்போமே. எதற்காகப் புறப்பே நின்று பேசுகிருர்கள்!''

இவ்வாறு அம்மையார் பாடுகிருர்—

திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே
ஆளாய்
உரைமருவி யாம்உணர்ந்தோம் கண்டீர்;—
தெரிமினே
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம்
அமைந்தோமே;
எம்மைப் புறம் உரைப்பது என்?

உலகியலில் ஈடுபட்டு எம்மைப்பற்றிப் பழி கூறுகிறவர்களே, கங்கை பொருந்திய செம்மையான சடையை உடைய சிவபெருமானுடைய செம்மையான திருவடிக்கே ஆளாகி, அவனைப் பற்றிய உரைகளையே பொருந்தி. அவனை யாம் உணர்ந்தோம்; இதைப் பாருங்கள்; இந்த நிலையை அறிந்து கொள்ளுங்கள். இகபோக வாழ்வுக்கும் அடுத்த வாழ்வுக்கும் உரிய எல்லா நலன்களும் அமையப் பெற்றேம்: அப்படி இருக்க, எம்மைப் புறத்தே நின்று பழி கூறுவது ஏன்?

[திரை-அலை; இங்கே கங்கைக்கு ஆயிற்று; ஆகுபெயர். செஞ்சடையையும் சேவடியையும் நினைத்து முடி முதல் அடி வரையில் எண்ணிப் பார்க்கிருர். உரை-இறைவனுடைய புகழ். உணர்ந்தோம்- அவனை மெய்ப்பொருள் என்பதை அநுபவத்தில் தெளிந்தோம். ஆளானது மெய்யின் செயல்; உரை மருவியது வாக்கின் செயல்; உணர்ந்தது மனத்தின் செயல். மூன்று கரணங்களாலும் அவனுடைய தொடர்புடையோம் என்ருர். கண்டீர், தெரிமின் என்பவை குறை கூறுவார்களை நோக்கிச் சொன்னது; ஓ: அசை நிலை. அமைந்தோமே: ஏகாரம் அசை. புறம் உரைப்பது- நேர்நின்று சொல்லத் தைரியம் இல்லாமல் புறத்தே நின்று பழி கூறுதல். என்-என்ன பேதைமை!

ஆளாய், மருவி, உணர்ந்தோம், புறம் உரைப்பது என் என்று முடிக்க.]

இறைவனை வழிபட்டு வாழ்பவர்களுக்கு இம்மையிலும் அம்மையிலும் நிறைவான வாழ்வு அமையும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 91-ஆவது பாடல் இது.

---

பெருமைக்காரன் கடவுளை இழக்கிருன். பொருமைக்காரன் நண்பனை இழக்கிருன். கோபக்காரனே தன்னையே இழந்துவிடுகிருன்.
—மாக்ஸ்ஸோ

# ஆன்மிக உரையாடல்

மகாபுருஷ் மகராஜ் (சுவாமி சிவானந்தர்) தமது குழந்தைப் பருவத்தைப்பற்றி இவ்விதம் கூறினார் :—

நான் அப்போது மிகவும் சிறியவனாக இருந்தேன். அந்தக் காலத்தைப் பற்றிய விஷயங்கள் இப்போது எனக்கு அதிகமாக நினைவில் இல்லை. ஆனால் என் தகப்பனார் பலருக்கு உணவளித்துக் காப்பாற்றி வந்தார் என்பது எனக்கு நன்றாக நினைவில் உள்ளது. என் தாயார் எல்லோருக்குமாகத் தானே சமையல் செய்து பரிமாறுவாள். மக்களுக்கு உணவு பரிமாறுவதில் என் தாயாருக்கு ஆர்வம் அதிகம். அப்போது என் தகப்பனார் எந்த விதச் சிரமமும் இல்லாமல் சமையற்காரனையும் வேலைக்காரர்களையும் நியமித்துக்கொள்ளும் நிலையில் இருந்தார். ஆனால் அவர் அவ்விதம் செய்ய என் தாயார் அவரை அனுமதிக்கவில்லை. அவள் வீட்டுவேலை முழுவதையும் பெரும்பாலும் தான் ஒருத்தியாகவே செய்வது வழக்கம். என் தாய் மாதர்குலத்திற்கு ஓர் இலட்சியப் பெண்மணியாக விளங்கினாள். அவளுடைய நடையுடை பாவனையெல்லாம் மிகவும் சாதாரணமாகவே இருக்கும். அவள் கஷ்டப்பட்டு உழைப்பதைக் கண்ட என் தந்தை பல சமயங்களில் மனம் வருந்தி இரக்கம் கொள்வார். அதற்கு என் தாய், ''இவ்விதம் எல்லோருக்கும் உணவளிக்கக் கூடிய நிலை என் பெரும் பாக்கியம் அல்லவா? இவர்கள் எல்லோருமே என் குழந்தைகள்தாம்'' என்று சொல்வாள். எனக்கு ஒன்பது வயது இருந்தபோது என் தாய் இறந்துவிட்டாள். அவள் அகலமான சிவப்புக் கரை போட்ட கெட்டிப் புடைவையை உடுத்துக் கொள்வது வழக்கம். இவற்றைத் தவிர வேறு எந்த விவரமும் இப்போது எனது நினைவில் இல்லை. என் தாயார் ஒருநாளும் எந்தப் பொருளையும் கேட்கமாட்டாள் என்றும், தன் துணிமணிகளைக்கூடக் கேட்கமாட்டாள் என்றும் என் மாமா சொல்வது வழக்கம்.

நாளடைவில் குருதேவரிடம் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்ததன் பயனாக, குடும்ப வாழ்க்கையை அடியோடு துறந்துவிட வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. நான் என் தந்தையிடம் இதைத் தெரிவித்து விடைபெற்று வரச் சென்றேன். என் எண்ணத்தை அறிந்த அவர் ஒரேயடியாக அழத் தொடங்கி விட்டார். அவரது கன்னங்களில் கண்ணீர் வழிய ஆரம்பித்தது. பிறகு இருவரும் வீட்டிலிருந்த பூஜையறைக்குச் சென்றோம். அங்கிருந்த தெய்வத்தை வணங்கும்படி தந்தை என்னிடம் கூறினார். பிறகு தமது கையை என் தலைமீது வைத்து ஆசீர்வாதம் செய்துகொண்டே, ''நீ பகவானை அடைவாயாக! குடும்ப வாழ்க்கையைத் துறந்துவிட்டு இறைவனைச் சாட்சாத்கரிக்க வேண்டுமென்று நானும் எவ்வளவோ கடுமையான முயற்சிகள் செய்தேன். ஆனால் அந்த முயற்சியில் தோல்வியடைந்தேன். ஆகவே நீ பகவானை அடைவாயாக என்று உன்னை நான் மனதார ஆசீர்வதிக்கிறேன்'' என்றார். இவ்விதம் என் தந்தை கூறியதை நான் குருதேவரிடம் தெரிவித்தேன். இதைக் கேட்டு அவர் அதிக மகிழ்ச்சியுடன், ''மிகவும் நல்லதாயிற்று!'' என்றார்.

சந்நியாசி : இந்தக் காலத்தில் இத்தகைய பெற்றோரை மிகமிக அபூர்வமாகத்தான் பார்க்க முடியும். அப்படிப்பட்டவர்கள் இல்லவே இல்லை என்று சொல்வதும்கூட மிகையாக இருக்காது.

மகாபுருஷர் : ஆம், உண்மைதான். என் தந்தை சிறிது ஆன்மிகச் சாதனைகளில் ஈடுபட்டவராக இருந்ததனால் அத்தகையவராக இருந்தார். சத்தியசொரூபியான ஆண்டவனை அடைய அவருக்கு உண்மையான பேராவல் இருந்தும் அவருடைய முயற்சி பலிக்கவில்லை. மேலும், அவர் குடும்ப வாழ்க்கையில் பலவித அனுபவங்களை நிறையப் பெற்றிருந்தார்.

அதனுல்தான் அவர் அவ்வளவு சுலபமாக எனக்கு விடைதந்து அனுப்பி வைத்தார்.

மகாபுருஷ் மகராஜ் இரவில் உணவு அருந்திக் கொண்டிருந்தார். அப்போது குருதேவரின் உணவு விஷயமாகப் பேச்சு எழுந்தது. சந்நியாசி ஒருவர் மகாபுருஷ்ஜியிடம் வினவினுர்—''மகராஜ்! குருதேவரின் கைகள் மிகமிக மிருதுவாக இருந்தன என்பது உண்மைதானு? ஒரு நாள் ஒரு லூசியை (நெய்யில் பொரித்த மைதா மாவினுல் ஆன பூரி) அவர் பிட்டுச் சாப்பிட்டபோது அவரது விரல்கள் இரத்தக் காயமடைந்தனவாமே?''

மகாபுருஷர்: ஆம், அவரது கைகள் மிகவும் மிருதுவாகத்தான் இருந்தன. கைகள் மட்டும் என்ன, அவரது அங்கங்கள் யாவுமே மிகவும் மிருதுவாகத்தான் இருந்தன. கெட்டியான மேற்பகுதியையுடைய ஒரு வகை லூசி இருக்கிற தல்லவா? ஒரு நாள் அத்தகைய லூசியைப் பிட்ட பொழுதே அவரது விரல்கள் இரத்தக் காயமடைந்தன.

இரவு நேரத்தில் குருதேவர் உட்கொண்ட உணவின் அளவைப்பற்றிய ஒரு கேள்வியை யாரோ ஒருவர் கேட்டார். அதற்கு சுவாமி சிவானந்தர் தமது தட்டில் இருந்த லூசியைக் காட்டி, ''இதைப் போன்ற சிறிய ஒரு லூசியை யோ அல்லது அதிகமானுல் இரண்டையோ மட்டுமே அவர் இரவில் உட்கொள்வார். அத்துடன் கொஞ்சம் பாயசமும் சாப்பிடுவார். பாலே அப்படியே குடித்தால் அவருக்கு ஜீரணம் ஆகாது. ஆகவே பாலுடன் நீரைச் சேர்த்துச் சிறிது ரவையுடன் கொதிக்க வைத்து அதைப் பாயசமாக்கித் தருவார்கள்; அந்தப் பாயசத் தையே அவர் சிறிது பருகுவார். அலமாரியில் சந்தேஷ் முதலான தித்திப்புத் தின்பண்டங்கள் இருக்கும். பசித்தபோது அதிலிருந்து சந்தேஷ் ஒன்று அல்லது இரண்டை எடுத்து உட்கொள் வார். சில சமயங்களில் சந்தேஷ் ஒன்றில் உட்கொண்டுவிட்டு மீதியுள்ள பாதியை அங்கே தம்முடன் இருந்தவர்களுக்குக் கொடுத்துவிடு வார். அவர் செய்கைகள் யாவும் ஒரு குழந்தையின் செய்கைகளேப் போலவே இருந்தன. அவர் ஒரு குழந்தையைப் போலவே இருந்தார்.''

இரவு உணவுக்குப்பிறகு மகாபுருஷ் மகராஜ் தமது அறையில் அமர்ந்திருந்தார். அப்போது சந்நியாசி ஒருவர், ''மகராஜ்! குருதேவர் இறுதியாக நோயுற்றிருந்தபோது நீங்களும் விவேகானந்தரும் அபேதானந்தரும் குரு தேவரிடம் ஒன்றும் தெரிவிக்காமலே புத்த கயைக்குச் சென்றீர்கள் அல்லவா? அங்கிருந்து மூவரும் திரும்பியபிறகு குருதேவர் உங்களிடம் ஏதாவது சொன்னுரா?'' என்று வினவினுர்.

மகாபுருஷர்: ஆம், சொன்னுர். தமது ஒரு விரலால் வட்டமொன்று செய்து காட்டிப் பின்பு கட்டைவிரலே ஆட்டிக்கொண்டே, ''வேறெங்கும் எதுவும் இல்லே'' என்ருர். பிறகு தமது திரு மேனியைச் சுட்டிக்காட்டி, ''இப்போது எல்லாம் இங்கேதான் இருக்கிறது. நீ விரும்புகிறபடி எங்கே வேண்டுமானுலும் சுற்றி வரலாம். ஆனுல் வேறெங்கும் எதையும் (ஆன்மிகம்) காண மாட்டாய். இங்கு எல்லாக் கதவுகளுமே திறந்து கிடக்கின்றன!'' என்று கூறினுர்.

---

ஒரு நேரிய மனிதன் இறைவனின் ஒரு சீரிய வேலே. —பர்ன்ஸ்

செல்வமுள்ளவன் இறைவனேத் தன் சட்டைப்பையில் வைத்திருக்கிருன்; ஆனுல் ஏழையோ தன் இதயத்தில் இறைவனே வைத்துக்கொள்கிருன். —யூதர் பழமொழி

1. உண்மையாக நடந்து கொள்ளுதல், 2. சமத்துவ உணர்ச்சி, 3. தன்னடக்கம், 4. படாடோபமின்மை, 5. மன்னிக்கும் சுபாவம், 6. தர்மகுணம், 7. பிறர்நலனில் அக்கறை 8. பணிவு, 9. பொறுமை, 10. பொருமையின்மை, 11. மன அமைதி, 12. இரக்கம் 13. தீங்கு செய்யாமை — இந்தப் பதின்மூன்றும்தாம் நிச்சயமாகச் சத்தியத்தின் உருவங்களாகும் —மகாபாரதம், சாந்திபர்வம்

# அருள்நெறிக் கதை

## செய்நூல் பிழைக்கலாம்

வெளியே இடியும் மின்னலுமாகப் பெருமழை பெய்துகொண்டிருந்தது. உள்ளே சிலர் தீமூட்டி அதன் அருகில் அமர்ந்தவாறு பேசிக் கொண்டிருந்தனர். தற்செயலாக அங்கு வந்த சிவப்பிரசாதம் என்ற சிறுவன் அவர்கள் பேசுவதைக் கூர்ந்து கவனித்தான்.

அவர்களில் ஒருவர், சிவபெருமானும் பார்வதி தேவியும் உறையும் திருக்கயிலாயம் என்னும் தலத்திற்கு யாத்திரை சென்றதையும், வழியில் பல மைல்கள் பனி மூடிய பாதைகள் வழியே நடந்து சென்ற அனுபவத்தையும் அருகில் இருந்தவர்களிடம் கூறிக்கொண்டிருந்தார்.

சிறுவன் சிவப்பிரசாதம் ஆர்வத்துடன் அதனைக் கேட்டுக்கொண்டிருந்தான். கயிலாய யாத்திரை செய்தவரின் அருகில் சென்று ஆயிரம் கேள்விகளை அவரிடம் கேட்டான். முடிவில் தானும் மறுநாளே கைலாய யாத்திரை தொடங்குவதாக அவன் உறுதி பூண்டான்.

சில மாதங்களுக்குப் பின் அந்தச் சிறுவன் கயிலாய யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பி வந்துகொண்டிருந்தான். புழுதி நிறைந்த பாதையின் வழியே நடந்து வந்த போது அவனது முகத்தில் துயரமே படிந்து கிடந்தது. அருகில் இருந்த மரங்களில் உள்ள கனிகளோ, சிற்றூருகளின் இனிய ஓசையோ, அருகே நடந்து வந்த யாத்திரிகர்களின் அரவமோ அவன் மனதைக் கவரவில்லை. அவனது இள நெஞ்சில் தாங்கவொண்ணாத வருத்தமே குடி கொண்டிருந்தது.

அந்தச் சிறுவன் கயிலாயகிரிக்குச் சென்று வந்தபோதிலும் அங்கே இறைவனைக் காண முடியவில்லை. அதனால் நம்பிக்கை இழந்து, 'கடவுள் இருப்பதும் உண்மையா? மதம் என்பது நம்பத் தகுந்ததுதானா?' என்று சிந்தித்துக் கொண்டே நடந்தான். மீண்டும் அவன் மனதில், 'ஒருகால் நான் ஏமாற்றம் அடைந்தேனோ? உலக வாழ்க்கை துன்பம் நிறைந்தது என்று நான் நினைத்ததுதான் தவறா?' என்று தனக்குள்ளேயே கூறிக்கொண்டான்.



அந்தச் சமயத்தில் சிவப்பிரசாதத்திடம் வயது முதிர்ந்த துறவி ஒருவர் வந்து சேர்ந்தார். நல்லியல்பால் ஏற்பட்ட பழக்கம் காரணமாக, சிவப்பிரசாதம் துறவியைக் கையைக் கூப்பி வணங்கினான். அந்தத் துறவி அவனிடம், ''குழந்தாய், ஏன் இவ்வளவு துயரம் நிறைந்த முகத்தோடு காணப்படுகிறாய்? இறைவனது உறைவிடத்தினின்றும் திரும்பி வரும் நீ ஏன் மனம் தளர்ந்து காணப்படுகிறாய்?'' என்று கேட்டார்.

''அதை எப்படி உரைப்பேன்? கடவுள் உலகில் இருக்கிறாரா? இருப்பது உண்மையாயின் அவர்

விஷநோயால் வாடிக் கிடக்கும் ஒரு புலியை, மிருக வைத்தியர் காண்கிருர்; பரிவுடன் வலியச் சென்று அதற்கு வைத்தியம் பார்க்கிருர். விஷ நோயைக் குணப்படுத்திய மறுகணமே அந்தக் கொடும் புலிக்கு அவரே இரையாக நேரிடுகிறது.

அது போலவே, நமது மனப்பாங்கை அறியும் இயல்பில்லாத புல்லறிவாளர்களுக்கு நாம் ஓர் உதவி செய்தால் அது பாருங்கல்லின் மீது போட்ட மண்கலயம் போலத் துகள் துகளாகச் சிதறிவிடும். நமது மனப்பாங்குக்கு மதிப்புக் கொடுப்பவர்களுக்குத்தான் நாம் உதவி செய்ய வேண்டும். —ஔவையார்

---

எங்கு இருக்கிருர்? சாஸ்திரங்கள், சாதுக்கள், புண்ணியக் கிரியைகள், யாத்திரைகள்—இவை எல்லாவற்றின் உதவியையும் நாடினேன். ஆயினும், இன்னும் ஆண்டவனை நான் கண்ட பாடில்லையே?'' என்று வெறுப்போடு கூறினன்.

துறவியோ சாந்தம் ததும்பிய குரலில், ''குழந்தாய்! அப்படியா? மனம் தளர வேண்டாம். இறைவன் இதயத்தில் உறைவதை நான் அறிவேன். அங்கே அவனைக் காணுதவரை வெளியே எங்கும் காணமாட்டாய். வா! நாம் இருவரும் சேர்ந்து நடப்போம். நான் ஒரு கதை கூறுகிறேன்'' என்று மொழிந்தார்.

வழி நடந்தபடியே துறவி, சிறுவனிடம் பின் வரும் கதையைக் கூறலானுர்:—

முன்னெரு காலத்தில் ராமசரணன் என்னும் வயதான வணிகன் ஒருவன், கங்கைக் கரையிலுள்ள ஒரு சிற்றூரில் வாழ்ந்து வந்தான். நாள்தோறும் புனித கங்கையில் நீராடிப் பின் துளசிதாசரின் இராமாயணத்தைப் பாராயணம் செய்து வருவான். இவ்வாறு நடந்து வந்த போது அவன் வளர்த்த கிளி ஒன்று தூக்கிய தலையோடு அருகில் அமர்ந்து, துளசி இராமாயணப் பாராயணத்தைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருப்பது வழக்கம்.

ராமசரணன் கிளியின்மீது அளவு கடந்த பிரியத்துடன் இருந்தான். அதன் கழுத்தைச் சுற்றி ஓர் அழகிய வளையத்தை அணிந்து, அடிக்கடி அதனேடு பேசிக்கொண்டிருப்பான். பின்பு 'ராம'நாமத்தை அதற்கும் கற்பித்தான். அந்தப் பைங்கிளியும் ராமநாமத்தை ஓதுவதில் மிக்க திறமை பெற்று விளங்கலாயிற்று.

ஒரு நாள் ராமசரணன் அருகில் வாழ்ந்து வந்த ஞானியைக் காணும்பொருட்டுக் கிளம்பினன். அதை அறிந்த அந்தக் கிளி ராமசரணனை நோக்கி, ''நீர் ஒரு ஞானியிடம்தானே செல்கிறீர்? அவரிடம் எனக்குச் சிறையினின்று விடுதலை உண்டாகாத காரணம் யாது என்று கேட்டு வாருங்கள். 'ராம' நாமத்தை ஓதினல் முக்தி பெறலாம் என்று ஞான சாஸ்திரங்கள் கூறுகின்றன. நானும் எப்போதும் அந்தப் பெயரையே ஓதி வருகிறேன். ஆயினும் இன்னும் இங்கே சிறையில் அமர்ந்துள்ளேன். முன்னேற்றம் ஒன்றையும் காணேன்'' என்று வேண்டிக்கொண்டது.



ராமசரணன் தனது பிரயாணத்தை முடித்துத் திரும்பியதும் அந்தக் கிளி அவனுக்கு வரவேற்புக் கூறியது. அவன் சாப்பிட்டு முடிக்கும்வரை பொறுமையோடு காத்திருந்தது. பின்னர் அவனிடம், ''ஐயா! நீர் எனது கேள்விக்கு யாது பதில் பெற்று வந்தீர்?'' என்று கேட்டது. அதற்கு ராமசரணன், ''நான் அவரிடம் கேள்வியைக் கேட்டபோது அவர் ஏதும் பதில் கூருது அமைதியாக மட்டும் அமர்ந்திருந்தார்'' என்று சங்கடத்தோடு பதில் கூறினன்.

மறுநாள் காலை ராமசரணன் கிளிக் கூட்டின் அருகில் சென்று பார்த்தபோது, அதனடியில் கிளி உயிரற்றுக் கிடந்தது. அதைக் கண்டு துயரப்பட்டு, அதனை ஒரு மரத்தடியில் இருந்த பொந்திற்கு எடுத்துச் சென்ருன். கடைசி முறையாக அதன் சிறகுகளை அன்போடு தடவி விட்டான். ஓர் அழகிய பிரார்த்தனையை வாய் விட்டு உரைத்தான். இறுதியாகப் புதிய இலைக்

கொத்துக்களைக் கொணர்ந்து அதன் உடலை மூடிவிட்டுத் தன் இருப்பிடம் நோக்கிச் சென்றான்.

இவ்வாறு செய்து முடித்ததும், கிளி உயிர் பெற்று எழுந்து, உயர்ந்த ஒரு கிளையை நோக்கிப் பறந்து சென்று அமர்ந்தது. இதனைக் கண்ட ராமசரணனுக்கு ஒரு புறம் மகிழ்ச்சியும், மறுபுறம் ஏமாற்றமும் ஏற்பட்டன. பிறகு அந்தக் கிளியை நோக்கி, "என் செல்லக் கிளியே! என்னையும் ஏமாற்றத் துணிந்தாயோ? என்னை ஏமாற்ற நினைக்கவில்லை என்றால் பின் நீ எவ்வாறு உயிர் பெற்று எழுந்தாய்?" என்று வருந்திக் கூறினான்.

அதற்கு அந்தக் கிளி, "என் அருமை நண்பரே! நீர் காணச் சென்றிருந்த ஞானியார் எனது கேள்விக்குத் தக்க பதிலை உமது மூலம் அனுப்பியிருந்ததை நீர் அறியவில்லையோ? என் கேள்விக்குப் பதிலாக அவர் ஏதும் கூறாமல் மௌனமாக இருந்தார் என்று நீர் என்னிடம் கூறினீர் அன்றோ?



"விடுதலையைப் பெற வேண்டுமானால் வெறும் மந்திரமொழியை உரைப்பது மட்டும் போதாது என்பதையும், ஐம்புலன்களையும் அடக்கிப் பிராணனிடத்து அவற்றை ஒடுக்கி லயமடையச் செய்தலும் அவசியம் என்பதையும் குறிப்பாக உமது பதிலிலிருந்து உணர்ந்தேன்.

"மேலும், நீர் சாஸ்திரங்களை வாசிக்கும் போதெல்லாம் 'பிராணனை மனதில் ஒடுக்கிக் கரைத்தல் வேண்டும்' என்பதையும், 'இவ்வாறு ஒருமுகப்படுத்தப்பட்ட உள்ளத்தைக் கொண்டு ராமநாமத்தை ஓதுதல் வேண்டும்' என்பதையும், 'இந்த முறையில் மட்டும் ராமரது தூய நாமம் நமக்கு விடுதலை அளிக்கும்' என்பதையும் நீர் கூறக் கேட்டுள்ளேன்.

"ஆனால், இறைவனது நாமத்தை ஜபிக்கும் அந்தப் போதனையை அனுஷ்டிக்க வேண்டும் என்பதை நான் உணராது போனேன். அந்தப் பெரியவர் என் கேள்விக்குப் பதிலாக மௌன மானார் என்பதை நீர் கூறியதும் அவரது கருத்தை நான் உணரலானேன். உடனே அதைப் பழகத் தொடங்கினேன். ஆனால், நீர் என்னை இறந்து விட்டதாகக் கருதிக் கூட்டைத் திறந்து என்னை விடுவித்தீர்" என்று கூறியது.

இந்தக் கதையைத் துறவி கூறி முடித்ததும், வேறு ஏதும் கூறாமல் சிவப்பிரசாதனது பிரகாசமடைந்த முகத்தைக் கூர்ந்து கவனித்தார். சிவப்பிரசாதம் மகிழ்வோடு அவரிடம் விடை பெற்றுச் சென்றான்.

பல ஆண்டுகள் கழித்து ஒரு நாள் காசிமாநகரிலுள்ள ஓர் ஆசிரமத்தில் பலராலும் விரும்பிப் போற்றப்பட்ட ஒரு துறவி தேஜோமயானந்தப் பரம்பொருளை, அழியாத சாந்திநிலையை அடைந்தார்.

கிளியின் கதையைக் கூறிய துறவி உலகை விட்ட காரணத்தால், காசியில் ஞானப் பேறடைந்த துறவியே அன்று கயிலாய மலையிலிருந்து திரும்பி வரும்போது 'கடவுள் உலகில் இருக்கிறாரா?' என்று கேட்ட சிறுவன் என்பதை உலகிற்குச் சொல்ல முடியாமற் போய் விட்டது.

பைங்கிளியின் கதையைக் கேட்டு முக்தி நெறியை உய்த்தறிந்து, காசியில் மெய்யுணர்வு பெற்றவனே அந்தச் சிறுவனாவான். •

---

துக்கம் என்பதே தன்னைத் தொடாமல் எவன் ஒருத்தன் இருக்கிறானோ அவனே யோகி. யோகிக்கு அடையாளம் என்ன? பரமாத்மாவைச் சேர்ந்துவிட்ட அவனுடைய மனம் வேறு எதையுமே சேர்த்துக்கொள்ளாது.
—காஞ்சிப் பெரியவர்

நேர்மையான எண்ணத்தினாலும், ஒழுங்கான புத்திசாலித்தனமான காரியங்களைச் செய்வதனாலும், சரியான பேச்சினாலும் என் உள்ளத்தைத் தூய்மையாக்கிக்கொள்வதன்மூலம், கடவுளே! நான் உங்களை நினைவுகூரக் கருணைபுரியுங்கள்.
—காந்திஜி

# இந்தியாவின் எதிர்காலம்

சுவாமி விவேகானந்தர்

இந்தியா அழிந்துவிடுமா? அப்படி அழிந்து விடுமானுல் உலகிலிருந்து எல்லா ஞானமும் அழிந்து போய்விடும். நிறைந்த ஒழுக்கங்கள் எல்லாம் மறைந்தே போய்விடும். சமயத்தின் மீது நமக்கு உள்ள இதய பூர்வமான இனிய அனுதாப உணர்ச்சிகள் எல்லாம் அழிந்துபோய் விடும். அவை இருந்த இடத்திலே காமமும் ஆடம்பரமும் ஆண்தெய்வமாகவும் பெண் தெய்வமாகவும் குடிகொண்டு ஆட்சி செய்யும். பணமே அங்கே பூசாரியாக உட்கார்ந்து வஞ்சகம், பலாத்காரம், போட்டி ஆகியவற்றையே அது தன் பூஜைக்கிரியை முறைகளாக வைத்துக்கொள்ளும். மனித ஆன்மாவை அது பலிபீடத்தில் பலி யாக்கும். ஆனுல் அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி என்றுமே நடக்கப்போவதில்லே.

இந்தியாவின் எழுச்சி என்ற சக்கரம் மீண்டும் ஒரு முறை சுழல ஆரம்பித்துவிட்டது. மீண்டும் இந்தியாவிலிருந்து குரல் ஒலிக்க ஆரம்பித் திருக்கிறது. இந்தக் குரல் விரைவில் உலகின் எல்லாப் பகுதிகளிலும் கேட்டுத்தானுக வேண்டும்.

நம்புங்கள்; உறுதியாக நம்புங்கள். இந்தியர் கண்விழித்து எழுந்திருக்க வேண்டும் என்று ஆண்டவன் கட்டளை பிறந்துவிட்டது. இந்தியா எழுச்சி பெற்று முன்னேற்றப் பாதையில்தான் செல்ல வேண்டும் என்று ஆண்டவன் ஆணை பிறப்பித்தாகி விட்டது. பாமரர்களான இந்தியாவின் ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெறப்போகிறுர்கள்.

மிருகபலத்தால் அல்லாமல், ஆன்மிகபலத்தால் மட்டுமே இந்தியா எழுச்சி பெறப்போகிறது. அழிவு முறையின் மூலமாக அதன் எழுச்சி உண்டாகப் போவதில்லே. மாருக, அமைதி, அன்பு ஆகிய முறைகளின்மூலமாகத்தான் இந்தப் பணி நடைபெறும். அழிவு முறையால் அல்லாமல், சந்நியாசி அணியும் காவியுடையினுல் இந்தியாவின் நிலே உயர்த்தப்படும். செல்வச் செருக்கினுல் அல்லாமல், சந்நியாசியின் பிக்ஷைப் பாத்திரத்தின் ஆற்றலால் இந்தியாவின் நிலே உயர்வடையும்.

எதிர்கால இந்தியா நமது உழைப்பைப் பொறுத்துத்தான் அமைந்திருக்கிறது. பாரத மாதா தயாராகக் காத்திருக்கிறுள். அவள் உறங்கிக்கொண்டு மட்டும்தான் இருக்கிறுள்.

ஆதலால், எதிர்கால இந்தியா உன்னதமாக விளங்க வேண்டுமானுல், நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரே மனம் கொண்டவர்களாகி, ஒரு சங்கமாக ஆக வேண்டும். இதுவே எதிர்கால இந்தியாவை மகத்தானதாக விளங்கச் செய்வதற்கு உரிய இரகசியமாகும். அதர்வ வேத ஸம்ஹிதையிலுள்ள அற்புதமான ஒரு மந்திரம் இப்போது என் நினைவிற்கு வருகிறது: 'நீங்கள் அனைவரும் ஒரே மனதுடன் இருங்கள்; நீங்கள் அனைவரும் ஒரே எண்ணத்துடன் இருங்கள்.' ஒருமனப்பட்டு வலிமையுடன் இருப்பதுதான் ஒரு சமுதாயம் வெற்றி பெறுவதற்கு உரிய இரகசியம். மக்களுடைய மனச்சக்திகளே ஒன்ருகத் திரட்டுவது, இணங்கியும் இணேந்தும் செயற்பட வைப்பது, எல்லோரையும் ஒருமுகப்படுத்துவது, எல்லோருடைய ஆற்றல் களேயும் ஒருமுனைப்படுத்துவது—இதுவே வெற் றிக்கு உரிய இரகசியம்.



எனது சகோதரர்களே! நாம் அனைவரும் கடுமையாக உழைப்போமாக. உறங்குவதற்கு இது நேரமில்லே. முதலிலேயே பெரிய திட்டங்களேப் போட்டுக் கொண்டு கிளம்ப வேண்டாம். நிதானமாக ஆரம்பியுங்கள்; ஆழம் பார்த்துக்கொண்டே மேன்மேலும் நிதானமாக

மனிதர்களிடம் நீ நம்பிக்கை வை. அவர்கள் உன்னிடம் விசுவாசமாகவே இருப்பார்கள். அவர்களைப் பெரிய மனிதர்கள் போல் நடத்து. அவர்கள் உன்னிடம் பெரிய மனிதர்கள் போல நடந்துகொள்வார்கள். —எமர்ஸன்

முன்னேறுங்கள். எழுந்திருங்கள், எழுந் திருங்கள்; நீண்ட இரவு கழிந்துவிட்டது; இந்தியாவின் ஒளிமயமான எதிர்காலம் என்ற பொழுது புலர்ந்து வருகிறது; கடல் பொங்கிப் புரண்டெழுந்து வருகிறது. அதனுடைய உத்வேகத்தைத் தடுத்து நிறுத்த எதனுலும் ஆகாது.

இப்போதிருக்கும் இந்தக் குழப்பத்திலிருந்தும் போராட்டத்திலிருந்தும் மகிமை பொருந்திய பரிபூரண எதிர்கால இந்தியா கிளம்பி எழுவதை நான் என் மனக் கண்ணுல் பார்க்கிறேன். அது எவராலும் வெல்ல முடியாததாகவும், வேதாந்த மூளையுடனும் இஸ்லாமிய உடலுடனும் கிளம்பி எழுவதை நான் என் மனக் கண்ணுல் பார்க் கிறேன். ஹிந்து மதமும் இஸ்லாம் மதமும் இணைவதில்தான், அதாவது வேதாந்த மூளையும் இஸ்லாமிய உடலும் ஒன்றுசேர்வதில்தான் நமது தாய்நாடு உன்னத நிலையைப் பெறக்கூடிய ஒரே ஒரு வழி இருக்கிறது.



பிராம்மணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்ற நான்கு ஜாதியினரும் ஒருவருக்குப் பின் ஒருவராக முறையே உலகத்தை ஆட்சி செய்வர் என்று நான் முன்பே குறிப்பிட்டிருக்கிறேன்.

சூத்திர வகுப்பினர் தமது சூத்திரத் தன்மை யுடன் எழுச்சி பெறும் ஒரு காலம் வரும். ஒவ்வொரு நாட்டிலுமுள்ள சூத்திரரும் பிறவியிலேயே தங்களுக்கென்று அமைந்த சூத்திர இயல்போடும் பழக்க வழக்கங்களோடும், மனப் பான்மையில் வைசியராகவோ க்ஷத்திரிய ராகவோ மாருமல் சூத்திரராகவே இருந்து, ஒவ்வொரு சமுதாயத்திலும் முழுத் தலைமை—தங்கு தடையற்ற ஆதிக்கம் வகிக்கக்கூடிய ஒரு காலம் வரும். இந்தப் புதிய சக்தியின் சூரியோதயம் ஏற்கனவே மேலைநாடு களில் மெல்ல மெல்லத் தோன்ற ஆரம்பித்து விட்டது; இந்தப் புதிய தோற்றத்தின் விளைவு முடிவில் எப்படிப்பட்டதாக இருக்கும் என்று சிந்தனையாளர்களும் புரிந்துகொள்ள இயலாமல் திகைக்கிருர்கள். பொதுவுடைமை வாதமும், ஆட்சி யொழிப்பு வாதமும், அனைத்தையும் மறுக்கும் வாதமும், இவை போன்ற மற்றவையும் இனி வர இருக்கும் சமூகப் புரட்சியின் முன்னணியிலே இருக்கின்றன.

நீண்ட இரவு கழிந்து சென்றுவிட்டதாகத் தெரிகிறது; நமது கொடிய துன்பத்துக்கும் கடைசியில் முடிவு வந்துவிட்டதாகத் தோன்று கிறது; உயிரற்ற பிணம் போல் காணப்பட்ட உடலும் உயிர் தழைத்து எழுந்திருக்கக் காண்கிருேம். எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு குரல் வருவதைக் கேட்கிருேம். வரலாற் றுக்கும் எட்டாத நீண்ட நெடுங்காலமாக ஒளி வீசிய நம் தாய்நாட்டின் இமயம் போன்ற ஞானத்தின் குரல், தொண்டின் குரல், அன்புக் குரல் நம்மை அழைக்கிறது. இமயத்திலிருந்து தவழ்ந்து வரும் இனிய பூங்காற்றைப் போல், அந்தக் குரல், குற்றுயிராக இருந்த எலும்புகளுக் கும் தசைகளுக்கும் புத்துயிரைக் கொண்டு வருகிறது. நமது மயக்கமும் தூக்கமும் அகன்று வருகின்றன. ஆகா! தூங்கிக்கொண்டிருந்த நமது பாரதத் தாய் விழித்துவிட்டாள். பாரதத் தாய் தன் நீண்ட உறக்கத்தினின்றும் விழித்து எழுவதைக் காணுதவர் குருடர்களேயாவர்; அல்லது கண்ணிருந்தும் காணுதவர்களாவர். இனி நமது பாரதத் தாயின் முன்னே எவரும் எதிர்த்து நிற்க இயலாது; இனி முதற்கொண்டு அவள் என்றுமே உறங்கப்போவதில்லை. புற உலகச் சக்திகள் எவையும் அவளது முன்னேற்றத்தை இனித் தடுக்க முடியாது;

அளவற்ற வலிமையுடைய அந்த மகாதேவி விழித்தெழுந்துவிட்டாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்த நாள் முதற்கொண்டே சத்திய யுகம் தோன்றிவிட்டது. இனி மக்களிடையே இருந்து வரும் எல்லாவித வேறுபாடுகளும் ஓடி மறைந்துவிடும். சண்டாளர் வரையிலுமுள்ள எல்லா மக்களும் அவருடைய தெய்விக அன்பில் பங்கு கொள்வார்கள். ஆண் பெண் என்ற வேறுபாடு, ஏழை பணக்காரர் என்ற வேறுபாடு, கற்றவர் கல்லாதவர் என்ற வேறுபாடு, பிராம்மணர் சண்டாளர் என்ற வேறுபாடு ஆகிய எல்லாவற்றையும் அவர் வேரும் வேரடி மண்ணுமின்றிக் களைந்தெறிந்துவிட்டார். அவர் எல்லாவித விவாதங்களையும் சச்சரவுகளையும் முறியடித்து அமைதியை நிலவச் செய்பவர். ஹிந்து இஸ்லாமியன் என்ற வேறுபாடு, ஹிந்து கிறிஸ்தவன் என்ற வேறுபாடு முதலியவையெல்லாம் ஓடிப் போய்விட்டன. வேற்றுமை காரணமாக முன்பு ஏற்பட்டிருந்த சச்சரவுகளெல்லாம் இப்போது வேறு யுகத்தைச் சேர்ந்தவையாகிவிட்டன. இன்றைய சத்திய யுகத்திலே ஸ்ரீராமகிருஷ்ணரின் பேரன்பு வெள்ளம் எல்லாவற்றையும் ஒற்றுமைப்படுத்தி ஒன்றாக்கிவிட்டது.



ஸ்ரீராமகிருஷ்ணரைப் போன்று தெய்விகம் வாய்ந்த ஒருவர் எந்தக் காலத்திலும் இருந்ததில்லை. அத்தகைய ஸ்ரீராமகிருஷ்ணரை நடுநாயகமாகக் கொண்டு நாம் அனைவரும் அவரையே சார்ந்து வாழ வேண்டும். ஆனால் அதே சமயம் ஒவ்வொருவரும் தத்தம் விருப்பத்திற்கு ஏற்ப அவரைக் கடவுள் என்றோ, இரட்சகர் என்றோ, ஆசாரியர் என்றோ, இலட்சிய புருஷர் என்றோ, மகான் என்றோ ஏற்றுக்கொள்வதற்கு விட்டுவிட வேண்டும்.

> மந்திரிகளின் தீய அறிவுரைகளால் அரசன் கெடுகிறான்; உலகத்தின் மீது பற்று வைப்பதனால் சந்நியாசி கெடுகிறான்; பெற்றோர் செல்லம் கொடுப்பதனால் குழந்தை கெடுகிறான்; மறைகளை வழுவற ஓதாததனால் பிராம்மணன் கெடுகிறான்; கெட்ட நடத்தையுள்ள புதல்வனால் குடும்பம் கெடுகிறது; மரியாதைக் குறைவான நடத்தையால் நட்புக் கெடுகிறது; பல ஆண்டுகள் பிரிந்து வாழ்ந்தால் பாசம் கெடுகிறது; மதுக் குடிப்பது, மாதர்களைக் கெடுத்து விடுகிறது; வரவுக்கு மிஞ்சிய செலவு, வாழ்வைக் கெடுத்துவிடுகிறது.
>
> —பஞ்சதந்திரம்

பிராம்மண யுகத்திற்கு உரிய ஞானம், க்ஷத்திரிய யுகத்திற்கு உரிய பண்பாடு, வைசிய யுகத்திற்கு உரிய பகிர்ந்தளிக்கும் முறை, சூத்திர யுகத்திற்கு உரிய சமத்துவம் ஆகிய இந்த நான்கையும் ஒன்றாகச் சேர்த்தும், ஆனால் இந்த நான்கிலுமுள்ள குறைபாடுகள் எல்லாவற்றையும் நீக்கியும், ஒரு சமுதாயத்தை அமைக்க இயலுமானால், அதுவே உன்னதமான இலட்சிய சமுதாயமாகும்.

ஒரே சாதியும் ஒரே வேதமும் ஏற்பட்டு அமைதியும் சமரசமும் நிலவும் நாள் வரும்போது சத்திய யுகம் தோன்றிவிடும் என்று நான் நம்புகிறேன். சத்திய யுகம் பற்றிய இந்தக் கருத்து இந்தியாவைப் புத்துயிர் பெறச் செய்யும். இதை நம்புங்கள். இளைஞர்களே! ஊக்கத்துடன் எழுந்திருங்கள்! பணியில் ஈடுபடுங்கள்! புராதன ஹிந்து மதத்தையே எந்நாளும் போற்றுங்கள்! என் இளைஞர்களே! எழுந்திருங்கள், ஊக்கத்துடன் எழுந்திருங்கள், நாம் வெற்றி பெறப் போவது நிச்சயம்.

கையில் கலப்பை பிடித்த உழவர்களின் குடிசைகளிலிருந்து புதிய இந்தியா எழும்பட்டும்! மீனவர், சக்கிலியர், தோட்டிகள் ஆகியவர்களின் குடிசைகளிலிருந்து புதிய இந்தியா எழட்டும்! பலசரக்குக் கடைகள், பலகாரக் கடைகளி

லிருந்தும் அவள் தோன்றட்டும்! தொழிற் சாலைகள், கடைவீதிகள், சந்தைகள் ஆகிய வற்றிலிருந்தெல்லாம் புதிய இந்தியா எழுந்து வெளியே வரட்டும்! தோட்டங்களிலிருந்தும் காடுகளிலிருந்தும் குன்றுகளிலிருந்தும் மலைகளி லிருந்தும் புதிய இந்தியா எழுந்து வெளியே வரட்டும்!

இறந்த காலத்தின் எலும்புக்கூடுகளே! இதோ, உங்கள் முன்னால் உங்களது வாரிசுகள் நிற்கிறார்கள்! இதோ, உங்கள் முன்னால் எதிர் கால இந்தியா இருக்கிறது! உங்களிடம் இருக்கும் பெருநிதிப் பேழைகளையும் வைரக் கணையாழிகளை யும் அவர்களிடம் விரைவில் வீசியெறியுங்கள். விரைவில் அதைச் செய்துவிட்டு, நீங்கள் காற்றில் கலந்து மறைந்துபோங்கள்; இனி ஒருகாலும் மீண்டும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போய்விடுங்கள்! உங்கள் காதுகளை மட்டும் திறந்து வைத்திருங்கள், போதும். நீங்கள் மறைந்துபோகிற அந்தக் கணமே புத்தெழுச்சி பெற்ற பாரதத்தின் முதல் முழக்கத்தைக் கேட்பீர்கள். கோடிக் கணக்கான இடியொலிகள் கலந்தாற்போல உலகெங்கும் எதிரொலி செய்ய, 'குருதேவருக்கு ஜே' என்ற முழக்கம் வானோங்கி எழும்.

எழுமின்! விழிமின்! இந்த நமது தாயகமாகிய பாரததேவி, தனது அழிவற்ற அரியணையின் மீது புத்திளமை பெற்றவளாக, முன்பு எப்போதுமே இருந்ததை விடவும் அதிகமான மகிமை கொண்டவளாக அமர்ந்திருப்பதைக் காணுங்கள். அமைதியும் வாழ்த்தும் நிறைந்த குரலில் இந்தப் பாரத அன்னையின் மகிமையை உலகம் முழுவதிலும் பிரகடனப்படுத்துங்கள்.




**1. சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையும் போதனைகளும்**

'சோஷலிசம் என்னும் புதிருக்கு நான் விடை கண்டதே விவேகானந்தரிடம்தான்' என்று கூறும் பிரபல காந்தீயவாதியான இந்த நூலாசிரியர் புதிய ஒரு கோணத்தில் விவேகானந்தரின் போதனைகளை ஆராய்ந்திருக்கிறார்.

[ஆசிரியர்: வி. கே. ஆர். வி. ராவ், வெளி யிட்டோர்: சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை-625 001. டெம்மி சைஸ், பக்கம் 313. விலை ரூ. 20]

**2. பக்திக் கதைகள்**

ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தில் அருள்நெறிக் கதை, சிறுவர் பகுதிக் கதை ஆகிய தலைப்புகளில் பல ஆண்டுகளாகக் கதைகள் வெளிவந்துள்ளன. அவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முக்கிய மான 27 கதைகள் இந்தத் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ளன.

[தொகுப்பாசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர், வெளியிட்டோர்: ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004. பக்கம் 160. விலை ரூ. 5]

**3. இராமனைத் தரிசிப்போம்**

கம்ப ராமாயணத்தின் ஆறு காண்டங்களுக்கும் ஆறு அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு நூல் இது.

[வெளியிட்டோர்: என். எஸ். முத்துகிருஷ்ண ராஜா, கம்பன் கழகம், 6, தாண்டல் கந்தசாமி ராஜா தெரு, இராஜபாளையம்-626 117. டெம்மி சைஸ், பக்கம் 92. விலை ரூ. 3]

**4. இசை வளர்த்த தியாகராஜர்**

குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய, குழந்தை இலக்கியப் போட்டியில், வரலாற்றுக் கான முதற் பரிசாகத் தங்கப் பதக்கம் பெற்ற நூல் இது.

[ஆசிரியர்: ஆழி. வே. ராமசாமி, வெளி யிட்டோர்: கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம்-614 810. பக்கம் 102. விலை ரூ. 5]

**5. பகவான் புத்தரின் பண்பு வழி**

புத்தபிரான் அருளிய மணிமொழிகள், பௌத்தம் குறித்துத் தமிழ் நூல்களில் இடம் பெற்றுள்ள கருத்துக்கள் ஆகியவற்றின் தொகுப் பாக இந்த நூல் வெளிவந்துள்ளது.

[தொகுப்பாசிரியர்: புலவர் க. குமரன், வெளி யிட்டவர்: இரா. ஈசுவரப்பன், 36, வேதகிரி நாயகர் தெரு, ஆர்க்காடு, வ. ஆ. மாவட்டம். பக்கம் 59. விலை: குறிப்பிடப்படவில்லை.]

# பழிக்குப் பழி

மைதிலி வேணுகோபால்

ஒருவர் நம் மீது அடாது பழி சொல்லி விட்டாலோ, அல்லது நமக்கு மிகவும் பிரியமான வஸ்துவைக் கவர்ந்துகொண்டாலோ அல்லது அழித்துவிட்டாலோ, நாம் கறுவிக்கொண்டே இருப்போம். அவர்களை ஏதாவது ஒரு வழியில் பதிலுக்குத் துன்புறுத்திய பின்புதான் நம் வெறி, ஆத்திரம், கோபம் அடங்கும். இது மனித இயல்புதான். உணர்ச்சிகளை ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டு, அறிவு பூர்வமாய்ச் சிந்தித்துப் பார்த்தால், இந்த வெறி நம்மையே வேரோடு அழித்துவிடுவதைப் புரிந்துகொள்வோம். ஆனால், உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு முன், இந்த விவேகம் அடங்கிவிடுமேயன்றி, துணிந்து செயற் படாது. பெரிய ஞானிகளால்தான் இது முடியும்.



சூர்ப்பணகை ராக்ஷஸி. அவளுடைய நகம் முறம் போல இருக்கும் என்றால் உருவம் எப்படி இருக்கும்? புலஸ்தியரின் குமாரர் விச்ரவஸ்ஸின் இரண்டாவது மனைவி கேகஸி. இவர்களுக்கு ராவணன், கும்பகர்ணன், சூர்ப்பணகை, விபீஷணன் என்று நான்கு மக்கள். எல்லோரும் பெரியவர்களானதும், சூர்ப்பணகைக்கு வரன் பார்த்தனர். காலகை என்பவளின் மகனை வித்யுத்ஜிஹ்வன் என்பவனுக்கு அவளை மணம் செய்து வைத்தனர். மூத்த தமையன் என்ற முறையில், ராவணன் அவளுக்கு மிகவும் நன்றாகச் சீர் செய்து அனுப்பி வைத்தான்.

எல்லோரும் சுகமாக இருந்தனர். இப்படியே நிம்மதியாக இருந்திருக்கக் கூடாதோ? அப்புறம் இறைவன் ஏது? அந்த மாயவன் தன் லீலைகளை ஆரம்பித்தான்.

தன் பெருமைகளையும் வீரத்தையும் நிலை நாட்டிக் கொள்ள ராவணன் திக்விஜயம் செய்தான். காலகேயர் சும்மா இராமல் அவனை எதிர்த்தார்கள். அது தூங்கும் புலியை இடறி விட்டது போலிருந்தது. பெரும் போர் மூண்டது. காலகேயர் பூண்டோடு ஒழிந்தனர். அந்த வம்சத்தைச் சேர்ந்த வித்யுத்ஜிஹ்வனும் போரில் இறந்தான்.

கணவனை இழந்த சூர்ப்பணகை அழுது புரண்டாள். ராவணன் அவளை ஒருவாறு சமாதானப்படுத்தி, தண்டகாரணியத்தைச் சேர்ந்த ஜன ஸ்தானத்தில் ஓர் அரசை ஏற்படுத்திக் கொடுத்து, தன் ஒன்றுவிட்ட சகோதரர்களான கர தூஷணர்களைத் துணைக்கு வைத்துவிட்டு வந்தான்.

ராணி வாழ்க்கை, உல்லாசம், பதவி, அதிகாரங்கள்; மேலுக்குச் சூர்ப்பணகை அமைதி யாகத் தோற்றமளித்தாலும், உள்ளுக்குள்ளே நெருப்புப் போன்று புயல் வீசிக்கொண்டிருந்தது. தங்கையை மங்களமாக வாழ வைக்க வேண்டிய அண்ணனே அவள் மங்கலியத்தைப் பறிப்பதா? இது என்ன கொடுமை! கணவனுடன் வாழ்ந்த இன்ப நாட்களை அவள் அசை போட்டாள். இரத்தம் கொதித்தது. 'ராவணனை எப்படியும் பழி வாங்கியே தீர வேண்டும். அண்ணனாவது, தம்பியாவது! எல்லாம் சுத்தப் பொய்!' என்று அவள் சமயம் பார்த்துக்கொண்டே இருந்தாள். தக்க தருணம் வாய்த்தது.

பஞ்சவடியில் ராமலட்சுமணர்களின் அழகைக் கண்டு மோகித்து, மோகம் கைகூடாத நிலையில், எரிமலை போன்ற நெஞ்சத்தில் ஓர் உபாயம் உதித்தது. அண்ணனைப் பழி தீர்த்துக்கொள்ள

---

உடலின் நிழலிலும், கண்ணாடி முதலியவற்றில் தோன்றும் பிரதிபிம்ப உடலிலும், கனவில் காணும் உடல் எதுவோ அதிலும், உள்ளத்தில் கற்பனையில் காணும் உடலிலும் எப்படி உனக்கு நான் என்ற எண்ணம் ஒரு வகையிலும் இல்லையோ அவ்வாறே உயிருள்ள உடலிலும் இல்லாமலிருக்கட்டும்.

—விவேக சூடாமணி, 163

இதைவிட அரிய சந்தர்ப்பம் எப்படிக் கிட்டும்? தன் உபாயத்தின் பலன்களை மனக்கண்ணால் பார்த்தாள். 'ராவணன் தலை பத்தும், பனங்காய் போல் உதிர, மண்டோதரி கதற, இலங்கை அடியோடு நாசமாக, ராக்ஷஸ குலமே அழிகிறதே! உம்!' என்று ஒரு குரூரமான திருப்தி ஏற்பட்டது.

அறுபட்ட மூக்குடன், ''அண்ணா! உன் தங்கையின் கதியைப் பார்த்தாயா? உனக்கென்று சீதையைக் கொணர எண்ணித் தூக்கினேன்; இந்த நிலை!'' என்று புலம்பியவள், வேண்டு மென்றே ஒன்றுக்குப் பத்தாக, சீதையின் அழகை வர்ணித்தாள். இவள் சீதையை வர்ணிக்க வர்ணிக்க, ராவணனுக்குக் காமத்தீ தகித்தது. அதைத்தானே இவளும் வேண்டினாள்? காமம் கண்ணை மறைக்க, ராவணன் மாரீசனின் உதவியோடு சீதையைக் கவர்ந்தான். கடைசியில் ராமன் கையாலேயே முடிந்தும் போனான்.

''எனக்கு ராம லட்சுமணர் மேல் ஆசை ஏற்பட்டது. அவர்களை அண்டித் தோல்வி யடைந்தேன்'' என்பதை அப்படியே மறைத்து விட்டு, சூர்ப்பணகை பழிதீர்த்துக்கொள்ள, ''அழகி சீதையைக் கொண்டு வர எண்ணினேன், உனக்காக'' என்று பொய் சொல்லி, அவனது காமத்தைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்தாள்.

ராவணன் முடிகள் உதிர்ந்தன. சூர்ப் பணகையின் வெறியும் தணிந்தது—எப்போது? 'பழிக்குப் பழி; உயிருக்கு உயிர்' என்று வஞ்சம் தீர்த்துக்கொண்ட பின்புதான்! ○

---

## தத்துவத் துளிகள்

பழமும் நிழலும் தரக்கூடிய பெரிய மரத்தையே ஒருவன் அண்ட வேண்டும். அதிர்ஷ்டக் குறைவினால் பழம் கிடைக்காமற் போனாலும், மரத்தின் நிழலை யாரும் அபகரிக்க முடியாது அல்லவா?

தரமுள்ளவர்கள் தரம் இல்லாதவர்களுடன் தொடர்பு கொள்வதனால் பெருமை குன்றிச் சுருங்கிவிடுவார்கள்; யானையின் பெரிய உருவம் கண்ணாடியிலே தோன்றும்போது சிறியதாகிவிடு கிறது. ஏற்போன் ஏற்கப்படுபொருள் இரண்டுக்கும் உள்ள உறவு இத்தகையதே.

தூரத்தில் இருக்கும்போது ஆபத்துக்குப் பயப்படுவதும், ஆபத்து நெருங்கிவிட்டால் வீரத்துடன் போரில் இறங்குவதும் பெரியோர் இயல்பு. துன்பம் வரும்போது பெரியவர்கள் தைரியத் துடன் இருப்பார்கள்.

மிகுந்த பலசாலியோடு சண்டையிட்டுக் கொண்டுதான் ஆகவேண்டும் என்பது சட்டம் இல்லை. யானையோடு மனிதன் சண்டை போட்டால் மனிதன்தான் இறப்பான்.

காலம் சரியாக இல்லாதபோது ஆமையைப் போல உறுப்புக்களை உள் இழுத்துக்கொண்டு அடிகளைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்; தக்க தருணம் வந்துவிட்டால் செயலில் இறங்கிப் பாம்பைப் போல் சீற வேண்டும்.

சரியான பரிகாரத்தைத் தக்கபடி பயன்படுத்தத் தெரிந்தவன் சிறியதையும் பெரியதையும் சமநிலையில் சமாளிப்பான்; அருவியின் வேகம் புல்லைச் சாய்ப்பதோடு பெரிய மரங்களையும் வேரோடு பெயர்த்து அடித்துக்கொண்டு போய்விடுகிறது.

வள்ளன்மை உள்ளவன் இனிமையாகப் பேச வேண்டும். சூரனாக இருப்பினும் தற்புகழ்ச்சி கூடாது. தனது தாராளத் தன்மையைத் தக்காருக்கே பயன்படுத்த வேண்டும். வீரனாக இருப் பவன் கொடுமையாக நடப்பது கூடாது.

—ஹிதோபதேசம்

